# சத்துமிகுந்த, சுவையான
# பிரிட்டானியா க்ளாக்ஸோ பிஸ்கட்டுகள்




## வளரும் குழந்தைகளுக்கு
## சுவையான துணை

பிரிட்டானியா க்ளாக்ஸோ பிஸ்கட்டுகள் அருமையான தனிச் சுவையோடு மேம்பட்டு விளங்குவது ஏன்? சத்துச் செறிந்த ஆரோக்கியமான குணச்சிறப்பே காரணம். ஆசையோடு குழந்தைகள் அவற்றை விரும்பிச் சுவைத்து வருகின்றனர்! பிரிட்டானியா க்ளாக்ஸோ பிஸ்கட்டுகள்— வளரும் குழந்தைகளுக்குச் சுவையான துணை.

**பிரிட்டானியா**

**பிஸ்கட்டுகள் மிகச் சிறந்தவை**

சின்டாஸ்-BBC.GLX.6-140 TM

# ஸாண்டல்வுட் நைஸில்*

## உங்கள் மேனியைப் பாதுகாக்க இதனினும் சிறந்த டால்க் இல்லை—அதுவும் இத்தனை சிறந்த நறுமணத்துடன்.

ஸாண்டல்வுட் நைஸில்—இதிலிருந்து நீங்கள் பெறும் நன்மைகளை வேறு எந்த சாதாரண டால்கம் பவுடரும் தருவதில்லை. உங்கள் மேனிக்கு ஆண்டு முழுவதும் அருமையான பாதுகாப்புத் தரவல்ல விசேஷப் பொருட்கள் அடங்கியது நைஸில் ஒன்றுதான். துர்நாற்றம் வீசச்செய்யும் கிருமிகளைக் கொல்ல வல்ல குளோர் பென்ஸீன். வியர்வையை முற்றிலும் உறிஞ்ச வென்றே விசேஷ முறையில் உருவாக்கப் பட்ட இந்த பவுடர்—உங்கள் மேனி மீது அதிக நேரம் நீடித்து நிற்கிறது. சிந்தை குளிர்விக்கும் சந்தன மணம்...புத்துணர்வை உங்கள் மீது வாரியிறைக்கிறது.

மயக்கும் சந்தன மணம். நாளெல்லாம் நீடித்த புத்துணர்வு. ஆண்டில் 365 நாட்களும் புதுமை உணர்வு.






Sista's-GN-109-B/76 Tam.

## ஸாண்டல்வுட் நைஸில்*—உங்கள் மேனிக்கு உகந்தது

ஸாண்டல்வுட் **நைஸில்** நன்மருந்து குணங்களடங்கிய பவுடர் **க்ளாக்ஸோ** தயாரிப்பு

*டிரேடு மார்க்

பண்டிட் P.S. ராமசர்மாவின்

# சக்தி சஞ்சீவி

குழந்தைகளின்

ஈரல், குலைக்கட்டிகளுக்கு.

## எமது வைத்தியரின் மாதாந்திர சுற்றுப் பிரயாண விபரம் II

| ஊர் | தேதி | நேரம் | தங்கும் இடம் |
|---|---|---|---|
| கோவில்பட்டி | 12 | காலை 10-00 -- 11-00 | டிரான் சென்டர்., மெயின் ரோடு. |
| திருநெல்வேலி ஜங்ஷன் | 12 | மாலை 3-00 -- 6-00 | பாம்பே நூரல் லாட்ஜிங் ஹவுஸ், மெயின் ரோடு |
| அம்பாசமுத்திரம் | 13 | காலை 9-00 -- 10-00 | Dr. மகாதேவ அய்யர் வீடு, கீழ ரத வீதி. |
| தென்காசி | 13 | மாலை 3-00 -- 5-00 | ஷண்முகம் மெடிகல் ஸ்டோர்ஸ், வடக்கு ரத வீதி. |
| ராஜபாளையம் | 14 | காலை 10-00 -- 11-00 | ஸ்ரீ R. A. முத்துசாமி பிள்ளை மெடிகல் ஸ்டோர்ஸ், பாங்கு ரோடு. |
| ஸ்ரீவில்லிபுத்தூர் | 14 | காலை 11-30 -- 12-30 | ஸ்ரீ A. L. நாராயணய்யர், ஜவுளிக்கடை, கந்தாடைத் தெரு. |
| பெரியகுளம் | 14 | மாலை 5-00 -- 6-30 | யூனைடெட் மெடிகல் ஸ்டோர்ஸ், கடை வீதி. |
| திண்டுக்கல் | 15 | காலை 8-00 -- 9-30 | K. M. மெடிகல் ஸ்டோர்ஸ், அம்மன் சன்னதி தெரு. |
| நாமக்கல் | 15 | மாலை 3-30 -- 4-30 | கஸ்தூரிபா மெடிகல் ஸ்டோர்ஸ், பரமத்தி ரோடு. |
| ராசிபுரம் | 15 | மாலை 5-30 -- 6-30 | ராசிபுரம் மெடிகல் ஸப்ளைஸ். |
| சேலம் | 16 | காலை 9-11 | லக்ஷ்மி ராஜ்பவன், (டவுன் ஸ்டேஷன் எதிர்புறம்) |
| ,, | 16 | மாலை 3 - 5 | |
| ,, செவ்வாய்ப்பேட்டை. | 16 | மாலை 1-30 -- 2-30 | பிரபாத் மெடிகல் ஸ்டோர்ஸ், கடை வீதி. |
| தர்மபுரி | 17 | காலை 10-30 -- 12-00 | P. S. வெங்கடேஸ்வரய்யர் வீடு, யூனியன் ஆபீஸ் தெரு |
| கிருஷ்ணகிரி | 17 | மாலை 4-00 -- 5-00 | No. 4, சென்னை ரோடு. |
| திருப்பத்தூர் N. A. | 18 | காலை 9-00 -- 10-30 | சாரதா மெடிகல் ஸ்டோர்ஸ், கடை வீதி. |
| வேலூர் N. A. | 18 | மாலை 4-00 -- 5-00 | A. S. A. அண்டு கோ., லாங் பஜார். |
| பெரிய காஞ்சிபுரம் | 19 | காலை 9-00 -- 10-00 | H. மாதவன் அண்டு கோ., ராஜ வீதி. |
| சென்னை | 19 | மாலை 3-30 -- 5-00 | SP. S. S. கெமிஸ்ட்ஸ், பாண்டிபஜார், தி. நகர். |
| சென்னை | 20 | காலை 9-00 -- 11-00 | P. L. R. அண்டு கோ., 68, பெரிய தெரு, திருவல்லிக்கேணி. |
| சென்னை | 20 | மாலை 3-00 -- 5-00 | M/s. அல்லயன்ஸ் கம்பெனி, 156, ராமகிருஷ்ண மடம் ரோடு (மேற்கு மாட வீதி) மைலாப்பூர். |
| செங்கற்பட்டு | 21 | காலை ,10-00 - 11 00 | அம்பீஸ் ஸ்டோர்ஸ், பெரிய செட்டித் தெரு. |
| திண்டிவனம் | 21 | மாலை 3-00 -- 4-00 | ஜெயராம் மெடிகல் ஸ்டோர்ஸ், கடைவீதி (முன்சீப் கோர்ட் எதிர்புறம்) |
| விழுப்புரம் | 21 | மாலை 5-00 -- 6-00 | பீஜாட்சி போக்கோ கம்பெனி, திரு. வி. க. ரோடு. |
| திருவண்ணாமலை N. A. | 22 | காலை 8-30 -- 10-00 | பாரத் லாட்ஜ், கிழக்கு ரத வீதி. |
| திருக்கோவிலூர் | 22 | காலை 11-00 -- 12-00 | ஸ்ரீ கிருஷ்ண மெடிகல் நூரல், சன்னதி தெரு. |
| கடலூர் N. T. | 22 | மாலை 4-00 -- 5-30 | மணி பார்மஸி, நேபியர் ரோடு, மஞ்சக்குப்பம். |
| நெய்வேலி | 23 | காலை 9-11 | ப்ளாக் 13, வைதிக சமாஜம், தீபசாலை. |
| ,, | 23 | மாலை 4 - 6 | |
| கள்ளக்குறிச்சி | 24 | காலை 8-30 -- 9-30 | தி மெடிகல் சப்ளைஸ், கடை வீதி. |
| ஆத்தூர் | 24 | காலை 11-00 -- 12-00 | வாஸவி மெடிகல் ஸ்டோர்ஸ், கடை வீதி. |
| துறையூர் | 24 | மாலை 3-30 -- 5-00 | M. V. மளிகை அண்டு ஷாப், கடை வீதி. |
| பெங்களூர்-3 | 26 | காலை 9-11 | 14, V. கிராஸ் ரோடு. மல்லேஸ்வரம். |
| ,, | | மாலை 3 - 5 | |

குறிப்பு: பிரதி இங்கிலீஷ் மாதம் 10, 25 தேதிகளில் மாலை 4 முதல் 6 மணி வரை எமது வைத்தியர் மயூர வைத்தியசாலை B-11, 1வது கிராஸ், தில்லை நகர், திருச்சி என்ற விலாசத்தில் முகாம் செய்கிறார்.

## ஸ்ரீ சக்தி விலாஸ வைத்தியசாலை, கரூர் (போன் : 87) திருச்சி ஜில்லா




அநல ௵
வைகாசி 31
ஜூன் 13
1976

# கல்கி




## ஆறு மொழிகள் அறிந்தவர்!

பாரதத்தின் துணை ஜனாதிபதி திரு. ஜாட்டி ஆறு மொழிகளில் பேசவும் எழுதவும் அறிந்தவர்! ஆந்திராவில் சுற்றுப் பயணம் செய்தால் தெலுங்கில் பேசுவார்! அப்படியே மகாராஷ்டிரம், கர்நாடக மாநிலங்களுக்குச் சென்றாலும் அம்மாநில மொழிகளில் பேசுவார். இந்தி, ஆங்கில மொழிகளில் பாண்டித்யம் பெற்ற ஜாட்டி, வேத விற்பன்னர்களிடம் சம்ஸ்கிருதத்தில் உரையாடல்களை நிகழ்த்துவார்!

தகவல் ஏ. சுவாமிநாதன்

அடுத்த இதழில்: கவியோகியின் நாட்டியம்

சுமார் 1960–62 இருக்கும். திருச்சிற்றம்பலத்தில் நான் தொடங்கி நடத்தி வந்த காந்தி வித்தியாலயத்தில் குழந்தைகள், சிறுவர் சிறுமியர் — சுற்றுப்புறத்தில் உள்ள பல கோயில்களுக்குச் சென்று மார்கழி மாதத்தில் திருப்பாவை — திருவெம்பாவைப் பாடல்களை அதிகமாகப் பாடி வந்தார்கள். சிறப்பாகப் பந்தணைநல்லூர் பசுபதீசுவரர் ஆலயத்தில் மாத வழிபாடு — பிறர் மனத்தைக் கவரும் முறையில் செய்து வந்தார்கள். இது அந்தப் பக்கத்தில் உள்ள அனைவருடைய மனத்தையும் கவர்ந்திருந்தது. நானும் தவறாமல் குழந்தைகளோடு செல்வது வழக்கம். சுமார் இருநூறு சிறு குழந்தைகள், — பெரும் பகுதி திக்கற்ற குழந்தைகள் — பாசுரங்களைப் பாடி வந்தார்கள். இது அக்காலத்தில் பார்ப்பவர் கண்களுக்கும் மனத்துக்கும் பெரு விருந்து.

ஒரு நாள் எனக்குத் திடீரென்று ஆசார்ய சுவாமிகளிடமிருந்து தபாலில் பிரசாதம் வந்தது. பாசுரங்களைப் பிரசாரம் செய்வதைக் கேள்வியுற்றுத் தாம் மகிழ்ச்சி அடைந்ததாக அவர்கள் குறிப்பிட்டிருந்தார்கள். இந்தக் குறிப்பும் பிரசாதமும் எனக்கும் குழந்தைகளுக்கும் உடனிருந்த ஆசிரியர்களுக்கும் மிக்க மகிழ்ச்சியையும் மன எழுச்சியையும் தந்தன. அதன்மேல் சுவாமிகளைத் தரிசிக்க வேண்டும் என்ற எண்ணம் கொண்டிருந்தேன்.

63ம் ஆண்டு தொடக்கம் போகிப் பண்டிகையன்று காவேரிப் பட்டணத்தில் தங்கியிருந்த சுவாமிகளைத் தரிசிக்கும் நோக்கத்தில் புறப்பட்டு மாயூரம் வரையில் வந்தேன். அன்று அவர் மௌன தினம் என்று கேள்வியுற்றுத் திரும்பி விட்டேன்.

# யான் பெற்ற



மறு நாள் சங்கராந்தி. சுமார் ஒன்றரை மணிக்குக் கிராமத்திலிருந்து புறப்பட்டுக் குடும்பத்தோடு மாயூரம் வழியாகக் காவேரிப் பட்டணம் சென்றேன். விசேஷ தினமாகையால் சுவாமிகள் தங்கியிருந்த இல்லத்தில் பெரும் கூட்டம். எளிதாகத் தரிசிக்க முடியவில்லை. எப்படியோ நானும் என் மனைவியும் குழந்தைகளும் அந்த வீட்டினுள் நுழைந்து ரேழிக்குச் சென்ற நேரம் சுவாமிகள் வெளியே புறப்பட்டுச் சங்கராந்தி ஸ்நானத்துக்காக வரும் நேரமாயிருந்தது. அன்று பிற்பகல் 4.05 மணிக்கு மாதப் பிறப்பு. அந்நேரத்துக்குச் சரியாக ஸ்வாமிகள் ஸ்நானத்துக்கு எழுந்தருளினார்கள். கூட்டத்தின் நடுவிலே நின்றுகொண்டிருந்த என்னைப் பார்த்தார்கள். யார் என்று கேட்டவுடனேயே அருகிலிருந்த மாயூரம் கதர்க் கடை ஸ்ரீ வேங்கடராமன் என்ற அன்பர் அறிமுகம் செய்து வைத்தார். எப்படியோ அந்த நெருக்கடியில் நாங்கள் எல்லோரும் சாஷ்டாங்க நமஸ்காரம் செய்தோம். உடனே சுவாமிகள் பிரசாதம் கொண்டு வரச் சொல்லித் தட்டை என் பக்கம் திருப்பினார். நான் வாங்குவதற்காகக் கையை நீட்டிய பொழுது, ''உன் மனைவியும் நீயும் சேர்ந்து பெற்றுக் கொள்'' என்று சொன்னார்கள். அப்படியே பெற்றுக் கொண்டோம். பிறகு, ''நீ வாயேன்'' என்னார்கள். பின்தொடர்ந்தேன். வீட்டின் தலைவாயிலைக் கடந்து வெளியே வந்தோம். எதிரில் மகாராஜபுரத்திலிருந்து வந்த அன்பர்கள் மறு நாள் தங்கள் கிராமத்தில் பிக்ஷை கொள்ள வேண்டும் என்று பிரார்த்தித்துக் கொண்டார்கள். சுவாமிகள் அவ்வேண்டுகோளை அவ்வளவாகக் காதில் ஏற்றுக் கொள்ளாமல் கையமர்த்திவிட்டு நான் பின்தொடர வெளிப்பட்டார். 'காசியில் எந்த வருஷம் இருந்தாய்?', 'எத்தனை வருஷம்?', 'என்ன பாடம்?', 'எந்த மொழியில்?', 'எத்தனை

பேர் கேட்டார்கள்?' 'அதை எப்படி ஏற்றுக் கொண்டார்கள்?', 'நீ எதை வலியுறுத்திச் சொன்னாய்?' என்றெல்லாம் சரமாரியாக என்னைக் கேள்வி கேட்டார்கள். நானும் பதில் கூறினேன்.

''எம். ஏ. வகுப்புக்கு ஆங்கில மொழியில் சைவ சித்தாந்த பாடம். நான் போதித்த முக்கியமான கருத்து, 'உயிர்களெல்லாம் ஒன்று. தாவரம்கூட ஓர் உயிர்தான். அறிவுடைய மனிதனிடத்துப் பக்தியே பிரதானம். பக்தியில் சிறந்த அம்சம் எல்லா உயிர்களிடத்திலும் அன்பு காட்டுதல். டாக்டர் ராதாகிருஷ்ணன் துணைவேந்தராக இருந்த காலத்தில் நான் அங்கு ஆசிரியனாகப் பணி புரிந்தேன்'' என்று சொல்லி வந்தேன். நான் சொன்ன ஒவ்வொரு மறுமொழியையும் அவர்கள் நன்கு மனத்தில் வாங்கி மிக விரைவாகத் தொடர்ந்து அடுத்த கேள்வியைக் கேட்டது எனக்குப் பெரும் வியப்பு அளித்தது.

# பேறு...

நாங்கள் இருவர் மட்டுமே. பக்கத்தில் யாரும் இல்லை. சுவாமிகள் அடுத்து ஒரு கேள்வி கேட்டார்கள். ''திருப்பள்ளி எழுச்சி பாடியிருக்கிறீர்களே, பகவான் தூங்குகிறாரா? அவரைப் போய் நாம் எழுப்ப வேண்டும் என்று எதிர்பார்க்கிறாரா? இதைப் பற்றி உன் கருத்து என்ன?'' என்று கேட்டார்கள். திடீரென்று கேட்ட பொழுதிலும்கூட இது பற்றி நான் முன்னமே சிந்தனை செய்து வைத்திருந்தபடியால் பதில் சொல்ல முடிந்தது.

''மாணிக்கவாசகர் ஓர் அமைச்சராயிருந்தவர். நாட்டின் நிர்வாகம் பற்றிய திட்டங்கள் அவர் மனத்தில் மட்டுமே உருக் கொண்டிருக்கும். எல்லோருக்கும் எல்லாத் திட்டங்களும் தெரிய வராது. ஒவ்வொருவருக்கு ஒவ்வொரு பணியை அவர் சொல்ல முடியும். இது அவர் அனுபவம். அவருக்கு மட்டும் அல்ல; தஞ்சை ஜில்லாவில் சென்ற தலைமுறையில் மிராசுதார் எல்லோருக்குமே அந்த அனுபவம் உண்டு. மறு நாள் வேலைத் திட்டம் மிராசுதார் மனத்தில் மட்டுமே இருக்கும். இன்ன வயலில் இன்ன வேலை என்பது அவர் சிந்தனையில் மட்டுமே இருக்கும். ஆனால் கடமை உணர்ச்சியுடைய ஊழியன் அதிகாலையில் எழுந்து அவருடைய திட்டத்தைக் கேட்டுத் தெரிந்து கொண்டு தன் பங்கை நிறைவேற்றப் புறப்பட்டுப் போவான். திட்டத்தைத் தெரிந்து கொள்ளும் பொருட்டு அவர் வீட்டுக்கு வருகிறான். அவர் தூங்கினாலும் எழுப்பி, 'இன்றைக்கு என்ன வேலை? நான் செய்ய வேண்டிய பணி யாது?' என்று கேட்டுத் தெரிந்து கொண்டு போகிறான். மாணிக்கவாசகருக்கு இந்த அனுபவம் உண்டு. தம்மைத் தம் ஏவலர் வந்து கேட்ட மாதிரி தாமே இறைவன் சந்நிதியில் அதிகாலையில் சென்று தொழுது, 'எம்பெருமானே ! இன்றைக்கு நீ இடுகின்ற கட்டளை என்ன ? அதைச் சொல்லி அருள்வாயாக' என்று கேட்கிறார். அவருடைய வேலை பணியைச் செய்தல். பணியைக் கேட்டுத் தெரிந்து கொள்கிறார். தலைவன் உறக்கத்திலே இருந்தாலும் இவர் எழுப்புகிறார். எழுப்பித் தோத்திரம் செய்வதற்காக அல்ல. தம்முடைய கடமை யாது என்று கேட்டறிவதற்காக. இதை அவரே ஒரு திருப்பள்ளி எழுச்சிப் பாடல் கடைசி வரியில் அழகாகக் குறிப்பிடுகிறார்.

'' ஏது எமைப் பணி கொள்ளுமாறு
—அது கேட்போம்
எம்பெருமான் பள்ளி எழுந்தருளாயே !''

இது எல்லாப் பள்ளியெழுச்சிப் பாட்டின் சாரமுமாகும். திருவாசகத்தின் சாரமுமே யாகும்'' என்று சொல்லிச் சுவாமிகளுக்கு இந்தக் கருத்து உவப்பாயிருக்குமோ என்று கேட்டேன். சுவாமிகள் மிகவும் சந்தோஷப் பட்டார்கள். ''நீ நன்றாகத் திருவாசகத்தில் தோய்ந்து பேசுகிறாய்!'' என்று பாராட்டினார்கள். இந்தச் சம்பவம் அவர் மனத்திலும் நெடு நாட்கள் நினைவிருந்திருக்கிறது. சில ஆண்டுகள் கழித்து, மறுபடியும் நான் அவர்களைத் தரிசித்தேன். காஞ்சிபுரத்துக்கு அருகிலுள்ள நேமம் என்ற கிராமம். முன் போலவே ஒரு சிறு குளத்தங்கரை. இருட்டு. பெட்ரோமாக்ஸ் வெளிச்சம். ''திருச்சிற்றம்பலம் அருணாசலம்'' என்று அறிமுகம் செய்து கொண்டேன். ''ஆம் ! காவேரிப் பட்டணத்தில் பார்த்தோமில்லையா? எத்தனையோ விஷயங்களைப் பற்றிப் பேசினோமே'' என்று பல செய்திகளை நினைவுபடுத்தினார்.

சுவாமிகள் தரிசனத்தில் நான் பார்த்து அனுபவித்த அம்சங்கள் இரண்டு. யார் எப்படி நினைத்த போதிலும்கூட அவர்கள் உள்ளமானது சாதியைக் கடந்து நிற்கிறது. முகஸ்துதியை விரும்பவில்லை. 'சாதியே உயர்வு' என்ற எண்ணத்தை அவர்கள் நடத்தையில் காண முடியவில்லை. இரண்டாவது அவர்கள் உள்ளம் பெரிய பொருளைப் பற்றி நிற்கிறது. யாராயிருந்தாலும் அவர்களிடத்தில் ஒரு சிறப்பு அம்சம் இருக்குமானால் அதையே கூர்ந்து ஆராய்கிறார். உலக விஷயங்களை அவர் மனம் பற்றவில்லை. கல்வி, சேவை, சாஸ்திர ஞானம், தத்துவ ஆராய்ச்சி இவற்றையே மனம் நாடியிருக்கிறது என்பதை ஒவ்வொரு விநாடியும் அவர்கள் முன்னிலையில் நான் உணர்ந்தேன். அவர்களைத் தரிசித்த சில நிமிஷ நேரங்கள் வாழ்க்கையிலேயே ஒரு பெரும் பேறு என்று உண்மையாக உணர்ந்தேன்.

டைரக்டர் — தமிழ், சமஸ்கிருத
பிறமொழிகள் ஆராய்ச்சி நிறுவனம்

மு. அருணசலம்


ரஷ்யா


காவிரி நீர்த் தாவாவுக்கும் விரைவில் உடன்பாடு காணப்படும்! — ஜெகஜீவன்ராம்
காவிரி
ஜெகஜீவன்ராம்


கூட்டுறவுத்துறை ஊழல்
மக்கள் புகார்
அரசு நடவடிக்கை

# அவசியமான அரசியல் திருத்தங்கள்

அரசியல் அமைப்புச் சட்டத்தின் அடிப்படை அம்சங்களைத் திருத்த வேண்டும் என்று சிபாரிசு செய்வது மிகப் பெரிய விஷயம். நாட்டு மக்கள் அனைவரையும் பாதிக்கக் கூடியது. பன்முறை சிந்தித்து, நிதானத்துடன் செய்ய வேண்டியது.

இதை ஸ்வரண் சிங் கமிட்டி, நன்றாகவே செய்துள்ளது. சட்ட நிபுணர்களையும், வழக்கறிஞர்களையும் கலந்துகொண்டு பொதுமக்கள் கருத்துக்களையும் திரட்டி, நாட்டு மக்களின் ஆசை அபிலாஷைகளை நிறைவேற்றி வைக்க, அரசியல் ஆதாரத்திலேயே திருத்தங்கள் அவசியமானவை என்ற உறுதியில், தமது சிபாரிசுகளை அவர்கள் செய்துள்ளனர். இதை அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியும் ஒருசில மாறுதல்களுடன் ஏறக்குறைய அப்படியே அங்கீகரித்தது. இதன்படி நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று அரசாங்கத்துக்கும் தாக்கீது விட்டிருக்கிறது. எனவே, இந்தத் திருத்தங்கள் விரைவிலேயே மேற்கொள்ளப்படும் என்று எதிர்பார்க்கலாம்.

**கல்கி**

**மலர் 35**

**இதழ் 46**



தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற • எங்கள் தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

ஸ்வரண் சிங் கமிட்டி செய்துள்ள சிபாரிசுகளின் விளைவுகள் முக்கியமாக மூன்று துறைகளில் உள்ளன. (1) அரசியல் அமைப்பை மாற்றக்கூடிய உயர் அதிகாரத்தைப் பார்லிமெண்டுக்கு வழங்கப் பட்டுள்ளது. உயர் நீதிமன்றங்களின் அதிகாரம் அந்த அளவுக்குக் கட்டுப்படுத்தப்படுகிறது. (2) நமது அரசியல் அமைப்பு ''ஜனநாயகக் குடியரசு'' என்று இப்போது இருப்பதை இனி ''சமயச் சார்பற்ற சோஷலிச ஜனநாயகக் குடியரசு'' என்று மாற்றிவிடச் சிபாரிசு செய்யப்பட்டிருப்பது மற்றொன்று. (3) சமூக நலன், சுயநலம் இவ்விரண்டும் முரண்படும்போது, சமூக நலனையே முதலாக வைத்துச் சுயநலனைப் பின்னுக்குத் தள்ளி மக்கள் அனைவரும் செயற்பட வேண்டும் என்ற அடிப்படையில் ஒவ்வொரு குடிமகனுக்கும் நாட்டுப் பொறுப்புக்கள் அவசியமாக இருக்க வேண்டும் என்று சிலவற்றை வற்புறுத்தியுள்ளனர் இக்கமிட்டியினர்.

பார்லிமெண்டு முறை அரசாட்சியை ஸ்வரண் சிங் கமிட்டியினர் அங்கீகரித்து, அதையே நீடிக்கச் செய்ய வேண்டும் என்று சொல்லியிருக்கின்றனர். இது கவனிக்கத் தக்கது. போற்றத்தக்கது.

சரியோ, தப்போ, நெடுநாட்களாகவே எந்த வித சமூக அபிவிருத்தித் திட்டங்களையும் விரைவில் நிறைவேற்றவொட்டாது தடையாக நிற்பது, மக்களுக்குச் சட்டத்தில் அளிக்கப்பட்ட சில ஆதார உரிமைகளும், அவற்றை நிலைநாட்ட நீதிமன்றங்கள் முற்படுவதும் தான் என்ற எண்ணம் காங்கிரஸ் கட்சியிலும், பொதுமக்களிடத்திலும் நிலவி வந்துள்ளது. ''ரிட்'' மனுக்கள் மூலம் பல சீர்திருத்தங்கள் தாமதப்பட்டதுடன், நிறைவேறாமலும் போயுள்ளன என்பதும் நாம் அறிந்ததே.

இதை அப்படியே ஏற்றுக் கொள்ளாமல் பலர் மறுக்கவும் கூடும். எந்தவித உண்மை முன்னேற்றத்துக்கும் நீதிமன்றம் குறுக்கே நின்றதில்லை என்று கூறுபவர்களும் உண்டு. உறுதியுடன் செயல்படாததும், அரசியல் கட்சிகளின் மெத்தனமும்தான் முன்னேற்றத்துக்கு முட்டுக்கட்டையாக இருந்தன என்று சொல்ல இடமுண்டு. சான்றுகளும் கூட எடுத்துக் காட்டலாம். ஏன்? அவசர கால நிலைமையை அனுசரித்து எத்தனை துறைகளில் எவ்வளவு முன்னேற்றம் ஏற்பட்டிருக்கின்றன? இவையெல்லாம் அரசியல் சட்டத்தையும் அடிப்படை உரிமைகளையும் திருத்தாமலேயே ஏற்பட்டிருக்கின்றனவே.

எனினும் மக்களின் பொதுக் கருத்தும், வெகு நாட்களாகவே நல்வாழ்வுக்கு உகந்த முறையில் புரட்சி இல்லாமல், அமைதியான முறையில் மகத்தான மாறுதலை உண்டாக்கச் சில ஆதார திருத்தங்களைச் செய்ய வேண்டியதுதான் என்ற வகையில் உருவாகிக் கொண்டு வந்திருக்கிறது. சமீப காலத்தில் இக்கருத்துக்கள் வலுப் பெற்று விட்டன.

மக்களின் ஆர்வத்தை அனுசரித்து, நமது பண்பாடுகளையும், அரசியல் நற்பண்புகளையும் கருத்தில் கொண்டு, செய்யப்

பட்டுள்ள சீர்திருத்த ஆலோசனைகள் புரட்சிகரமானவை என்று சொல்லத்தான் வேண்டும். ஆனாலும், அவசியமானவை; ஆகவே அவற்றை மக்கள் வரவேற்க வேண்டும். சட்ட மூலம் இவற்றுக்கு உருவம் கொடுக்கப்படும் போது அவசியமான சிற்சில அம்சங்களில் மறு பரிசீலனை செய்யப்படும் என்றும் எதிர்பார்க்கலாம். பொதுவாகவே இத்திருத்தங்கள் வரவேற்க வேண்டியவையே.

# என்ன சேதி?

## நதிநீர்ப் பிரச்னை

கிருஷ்ணா நதிக் தண்ணீர் பங்கீட்டுத் தகராறு சுமுகமாக இப்போது தீர்க்கப்பட்டுவிட்டது என்ற செய்தி மிக மிக நல்ல செய்தி. மத்திய அமைச்சர் திரு ஜகஜீவன்ராமின் மத்தியஸ்த ஏற்பாட்டை இறுதியானது என்று சம்பந்தப்பட்ட மூன்று மாநிலங்களும் ஏற்றுக் கொள்ளும் என்றே எதிர்பார்க்கலாம். உண்மையிலே இந்த முடிவு இறுதி முடிவாக இருக்கத்தான் வேண்டும்.

மகாராஷ்டிர, கர்னாடக, ஆந்திரப் பிரதேசம் ஆகிய மூன்று மாநிலங்களும் தங்களுக்குள்ளே உடன்பாட்டுக்கு வர முடியாததாலேயே, ''டிரிப்யூனல்'' தீர்ப்பு வழங்கி ஓர் ஆண்டுக்கு மேலாகியும், அதை அமுல் செய்யாமல் அந்தரத்திலேயே விட்டிருந்தனர். மத்திய அமைச்சர் தலையீட்டினால் இப்போது பிரச்னை தீர்க்கப்பட்டு விட்டது.

இதிலிருந்து இரண்டு உண்மைகள் பளிச்சிடுகின்றன. மாநிலங்கள், தங்களுடைய சுயநலத்தை மட்டுமேதான் பார்க்குமே தவிர, நாட்டின் நன்மையைக் கவனிப்பதில்லை என்பது ஒன்று. நதித் தண்ணீர் பல மாநிலங்களின் நடுவே பாய்ந்து சென்றாலும், அது தேசத்தின் பொதுச் சொத்து என்ற மனப்பான்மை கலபத்தில் எழுவதில்லை. இதை மத்திய அரசு, தன் அதிகாரத்தைப் பயன்படுத்தி, வற்புறுத்தித்தான் உணர்த்தி வைக்க வேண்டும் என்பது மற்றொன்று. அப்போதுதான் பொருளாதார முன்னேற்றம், முக்கியமாக, உணவு உற்பத்தி தடையின்றி வேகமாக ஏற்படும். இவற்றை உணர்த்தி வைக்கிறது கிருஷ்ணா நதிப் பிரச்னையின் முடிவு.

தமிழ் நாட்டுக்கும், இதிலிருந்து ஒரு நம்பிக்கை பிறக்க வழி ஏற்பட்டிருக்கிறது. காவேரித் தண்ணீர் பங்கீடும், கர்னாடக, தமிழ் நாடு ஆகிய மாநிலங்களுக்குள்ளே நிலவும் வேற்றுமைகள் அகற்றப்பட்டு, உடன்பாடு காண முடியும் என்ற நம்பிக்கை. இதை விரைவிலேயே உண்டாக்கி வைக்க, மத்திய அமைச்சர் முயலுவார் என்று எதிர்பார்ப்போமாக. கர்னாடக மாநிலத்தின் முட்டுக்கட்டைகள் கிருஷ்ணா தண்ணீர் பிரச்னைத் தீர்வுக்குப் பிறகு விலகக் கூடும் என்று நம்பலாம்.

## ஆலய நிர்வாகத்தில் மாறுதல்

தமிழ் நாடு தேவாலய நிர்வாகங்களில், பரம்பரைத் தர்மகர்த்தாக்களைத் தவிர, புகுத்தப்பட்ட தர்மகர்த்தாக்களுக்குச் சீட்டுக் கொடுக்கப்பட்டு விட்டது என்ற செய்தி திருப்தி அளிக்கும் நற்செய்தி. கட்சிச் சார்பும் ஊழல் நிர்வாகமும், கோயில் சொத்துக்களைத் தெய்வ காரியங்களுக்கு இன்றி இதர வகைகளில் விணடிப்பதும், அடிக்கடி கேட்கப்படும் குறைகள். ஆஸ்திகப் பெரு மக்கள் இக்குறைகளைக் கேட்டும், பார்த்தும் ஒன்றும் செய்ய முடியாத நிலைமையிலேயே இருக்க நேர்ந்தது. அவசர கால நிலைமையும், ஜனாதிபதி ஆட்சியும், நிர்வாகச் சுறுசுறுப்பும் ஒன்றாக இணைந்து தேவாலயங்களுக்கு நல்ல காலத்தைத் தோற்றுவித்திருக்கின்றன. பூஜை இல்லாக் கோவில்களில் பூஜையும், ஜீரணமாகிக் கிடைமாகியுள்ள பல சிறிய கோயில்களில் புனருத்தாரணமும் இனி வேகமாக ஏற்படலாம் என்று எதிர்பார்ப்போமாக.

பரம்பரைத் தர்மகர்த்தாக்கள் எல்லாருமே அப்பழுக்கற்றவர்கள் என்று இருக்க முடியாது. புகுத்தப்பட்ட தர்மகர்த்தாக்களும் எல்லாருமே குறையுள்ளவர்களாகவும் இருக்க மாட்டார்கள். எனினும், தட்டிக் கேட்க ஒருவரும் இல்லை என்ற நிலையிலிருந்து, நேர்மையுடனும் தெய்வத்தினிடம் பக்தியுடனும் நடந்து கொள்ள வேண்டும் என்ற புத்துணர்ச்சி ஆலய நிர்வாகத்துக்குப் பொதுவாகவே நன்மை பயக்கும் என்பதில் ஐயம் இல்லை.

ராஜாஜி சிந்தனை

### சுதந்திரத்தின் தனிச் சிறப்பு

நம்முடைய சுதந்திரத்தின் தனிச் சிறப்பு என்னவென்றால் அதன் வெற்றிச் சரித்திரத்தில் கலந்துவந்த கடவுள் பக்தியும் அதையொட்டிய சாத்துவிகமும். அந்தத் தனிச் சிறப்பை மங்காமல் மறவாமல் நாம் காப்பாற்றி வரவேண்டும். அப்போது தான் பாரத நாட்டுக்கு உலகத்தில் ஒரு தனி ஆசனம் இருக்கும். இல்லாவிடில் மற்றவர்களோடு பின் வரிசையில் பத்தோடு பதினொன்றாக இருக்க வேண்டியதுதான்.

—ரகுபதி ராகவ முன்னுரை

அமரர் கல்கி எழுதிய

# பார்த்திபன்



# பிரதி கோப்பையிலும் 100% சுத்தமான காப்பியை அள்ளித்தரும் இன்ஸ்டன்ட் காப்பி

# இதுதான்.




ஏன் தெரியுமா ?
நூற்றுக்கு நூறு பத்தரை மாற்றுத் தங்கம் போன்ற சுத்தமான இன்ஸ்டன்ட் காப்பி நெஸ்க:பே ஒன்று தான். மிகச் சிறப்பான தென்னிந்திய காப்பிக் கொட்டையிலிருந்து தயாராகிறது. நெஞ்சில் நிலைத்திடும் மணத்தையும், சிந்தை மயக்கிடும் சுவையையும் ரசித்து ருசிக்க-இப்போதே பருகுங்கள் நெஸ்க:பே.



உலகெங்கும் அதிகமாய் விரும்பப்படும் இன்ஸ்டன்ட் காப்பி

## நெஸ்க:பே

—100% சுத்தமான காப்பியிலிருந்து தயாராகும் இன்ஸ்டன்ட் காப்பி இது ஒன்றே

A NESTLÉ product

NNCH-31-75





# ஜீவகாருண்யம்

7

ஸ்ரீசத்குரு ஸ்ரீகாஞ்சி காமகோடி சங்கராசாரிய சுவாமிகள்

ஸ்ரீருத்ரத்தில் நாயையும் நாயாடியையும் கூடப் பரமேச்வரனாகச் சொன்ன மாதிரியே கீதையிலும் பகவான், ''சுனி சைவ ச்வபாகே ச பண்டிதா: ஸமதர்சின:'' என்கிறார். ஆத்ம ஞானிகள் நாயையும், நாய் மாமிசத்தைக் கூடச் சாப்பிடும் சண்டாளனையும் பிரம்ம மாகவே பார்க்கிறார்கள் என்று அர்த்தம்.

ரந்தி தேவனுக்கு அப்படிப்பட்ட த்ருஷ்டி இருந்தது. 'நாராயணன்தான் இப்படி நாய் களாகவும் அதைப் பிடித்துக் கொண்டு வரு பவனுமாக வேஷம் போட்டுக் கொண்டிருக் கிறான். தனக்குப் பசியிருப்பதாகவேஷம்போடு கிறான். அதைத் தணிப்பதுதான் பகவத் ஆராதனம்' என்று நினைத்தான். கொஞ்சம் கூட மனசு கலங்காமல் தன் பங்கான கஞ்சி முழுதையும் அவர்களுக்கு முன்னால் வைத்து விட்டான். 'நாய்க்கு நமஸ்காரம், நாயின் எஜமானனுக்கு நமஸ்காரம்' என்று ருத்ரம் சொல்கிற மாதிரியே அவர்களுக்கு நமஸ் காரம் பண்ணினான்.

இப்போது அவனிடம் இருந்ததெல்லாம் வெறும் தீர்த்தம்தான். ஒரே வறட்சிக்கால மாதலால் அந்தத் தீர்த்தம் கிடைப்பதுகூட ரொம்ப துர்லபமாகத்தான் இருந்தது. அதையாவது பானம் பண்ணினால்தான் இவனுடைய ஜீவன் உடம்பிலே நிற்கும் என் கிற ஸ்திதி.

இப்போதும் பகவான் சோதனையை நிறுத்த வில்லை. ஜலத்தையாவது குடித்துப் பிரா ணனை ரக்ஷித்துக் கொள்ளலாம் என்று இவன் பார்க்கிறபோது, மறுபடியும் ''சாமி, பசி பசி'' என்று பிரலாபம் வந்தது.

''அந்தத் தண்ணீரையாவது ஊத்து சாமி'' என்று சொல்லிக் கொண்டு ஒரு பஞ்சமன் (புலையன்) வந்து நின்றான்.

அப்போது ரந்தி தேவன் சொன்னதாக பாகவதத்தில் இரண்டு ச்லோகங்கள் வரு கின்றன. இரண்டும் இரண்டு ரத்னங்கள். தியாகத்துக்கு, பரோபகாரத்துக்கு இதை விடப் பெரிய மந்திரமில்லை என்று சொல்ல லாம். அதை அவன் சொன்ன வார்த்தை யிலேயே சொல்கிறேன். அப்புறம் தமிழில் அர்த்தம் சொல்கிறேன்.

**ந காமயே (அ)ஹம் கதிம் ஈச்வராத் பராம் அஷ்டர்த்தி யுக்தாம் அபுனர்பவம் வா !**

**ஆர்த்திம் ப்ரபத்யே (அ)கில தேஹ பாஜாம் அந்தஸ்திதோ யேன பவந்த்யது:க்கா: ||**

ருத்தி என்றால் ஸித்தி என்றே அர்த்தம் பண்ணிக் கொள்ளலாம். அற்புத சக்திகளை (miracleகள் செய்கிற சக்திகளை) எட்டு ஸித்திகள் அல்லது ருத்திகள் என்று சொல் வார்கள். இந்த 'அஷ்டருத்தி' தான் 'அஷ் டர்த்தி' என்றாகி யிருக்கிறது. இவை இருந்து விட்டால் சர்வலோகத்தையும் ஆட்டிப் படைத்து ஆளலாம். ரந்தி தேவன் என்ன சொல்கிறான் என்றால், (''(பராம்—) உயர்ந்த தான இந்த அஷ்ட ஸித்திகளைப் பெறுகிற (கதிம்—) வழியைக்கூட நான் (ஈச்வராத்—) ஈச்வரனிடமிருந்து (காமயே—) இச்சிக்க வில்லை; பிரார்த்திக்கவில்லை. எனக்கு மஹா சக்திகள் வேண்டுமென்றுகூடப் பிரார்த்தனை பண்ணவில்லை.'' சரி. அப்படியானால் இந்தச் சக்தி எல்லாம் அடங்கி அப்படியே பரம சாந்தமாக ஆடாமல் அசையாமல் இருக்கிற ஸமாதி நிலையை, மோக்ஷத்தைப் பிரார்த்திக்கிறானா? மறுபடியும் மறுபடியும் பிறவா நெறியான 'அபுனர்பவம்' என்ற முக்தியை விரும்புகிறானா? ''அதுவும் எனக்கு வேண்டாம்; ந காமயே (அ)ஹம் அபுனர் பவம் வா''. பின்னே ஈச்வரனிடமிருந்து எதைத்தான் அவன் இச்சித்துப் பிரார்த்திக் கிறானாம்?

''புழுவாகவோ பூச்சியாகவோ பட்சி யாகவோ மிருகமாகவோ மநுஷ்யனாகவோ சரீரம் என்று ஒன்றை வைத்துக் கொண்டு இத்தனை ஜீவராசிகள் இருக்கின்றனவே, இந்த (அகில—) அனைத்து (தேஹ பாஜாம்—) சரீரம் படைத்த பிராணிகளுக்கும் ஏதாவது துன் பம் இருக்கிறதல்லவா?'' ஆர்த்தி என்றால் துன்பம், துக்கம். அந்தத் துன்பத்தை ஒவ்வொருவருக்கும் உள்ளே இருக்கிற உள்ளம்தானே உணர்கிறது? உள்ளேயிருப் பதால்தான் அதற்கு உள்ளம் என்று பேர். ''அந்த:'' — உள்ளே, ''ஸ்தித:''—இருப்பது அந்த உள்ளம்தான். ''எப்படியோ ஒரு தினுசில் என்றால் மட்டும் அந்த உள்ளங் களுக்குள் இருக்க முடிந்து விட்டால், ஜீவ ராசிகளின் துன்பம் எல்லாம் என்னிடம் வந்து சேர்ந்துவிடுமல்லவா? இப்படி சகல ஜீவர்களின் கஷ்டத்தையும் வாங்கிக்கொண்டு

---

**[1932ம் வருஷத்திலிருந்து பெரியவர்கள் வழங்கிய உரைகள், ஸ்ரீமுகங்கள், கட்டுரைகளிலிருந்து தொகுத்தது]**



அநுபவிக்கிற சக்தியைத்தான், ஈச்வரா, உன்னிடம் நான்விரும்பிப் பிரார்த்திக்கிறேன். (யேன–) எதனால் பிராணிகள் (அது:கா:–) துக்கமற்றவையாக (பவந்தி–) ஆகுமோ அதைத்தான் உன்னிடம் வேண்டுகிறேன்'' என்கிறான்.

துக்கம் என்பது பாப கர்மாவினால்தான் வருகிறது. ஒருத்தருடைய பாவத்தை இன்னொருத்தர் வாங்கிக் கொண்டு அநுபவிப்பதை (vicarious suffering) என்று சொல்வார்கள். ஜீஸஸ் இப்படித்தான் லோகம் பூராவின் பாவத்தையும் வாங்கிக்கொண்டு தீர்ப்பதற்கே சிலுவையில் அறைபட்டதாகச் சொல்வார்கள். அந்த உத்கிருஷ்டமான தியாக சிந்தனை நம் மதத்துக்கும் புதிதானதல்ல. ரந்தி தேவன் வேண்டினது இதைத்தான். ''ஆர்த்திம் ப்ரபத்யே''என்று இதைத்தான் வேண்டினான்.

இதில் ''ப்ரபத்யே'' என்று ஒரு வார்த்தை வருகிறது. அநேக ஸ்தோத்திரங்களில் – முக்கியமாக ஸ்ரீவைஷ்ணவ கிரந்தங்களில்– ''சரணம் ப்ரபத்யே, சரணம் ப்ரபத்யே'' என்று வருவதைக் கேட்டிருப்பீர்கள். வேதத்திலேயே இருக்கப்பட்ட துர்க்கா ஸூக்தத்திலும் ''சரணம் ப்ரபத்யே'' என்று வருகிறது. ''ப்ரபத்யே'' என்றால் அடைக்கலம் புகுகிறேன், சரணாகதி பண்ணுகிறேன் என்று அர்த்தம். ஒன்றிடம் ஸர்வஸங்கப் பரித்யாகம்-(total surrender) பண்ணிவிடுவதுதான் ப்ரபத்தி. அதாவது 'ஸரண்டர்' (சரணாகதி) பண்ணுகிறவன் தன்னை அடியோடு ஸைஃபராக்கிக் கொண்டுவிட வேண்டும். அப்போது எதனிடம் இவன் 'ஸரண்டர்' பண்ணுகிறானோ, அது இவனை ஆட்கொண்டு, அப்படியே பூராவும் ரொப்பி (நிரப்பி) விடும். இப்படி பகவானிடம் தன்னை அடியோடு ஸைஃபராக்கிக் கொண்டு அவனாலேயே பூராவும் ரொப்பப் (நிரப்பப்)படுகிற நிலையைத்தான் பொதுவாக நாம் பார்க்கிற ஸ்தோத்திரங்கள், மந்திரங்கள் எல்லாவற்றிலும் 'ப்ரபத்யே' 'ப்ரபத்யே' என்று சொல்லியிருக்கிறது. துர்கா தேவியை சரணடைகிறேன் என்று வேத ஸூக்தத்தில் வருகிற மாதிரி, ஸ்தோத்திரங்களில் ''இந்த ஸ்வாமியை சரணடைகிறேன்'', ''அந்த ஸ்வாமியை சரணடைகிறேன்'' என்று ஒவ்வொரு ஸ்வாமி பெயரைச் சொல்லி வரும். உபநிஷத் பாடம் தொடங்குவதற்கு முன், ''மோக்ஷத்தில் நாட்டமுடைய முமுக்ஷுவான நான் புத்தியைப் பிரகாசிக்கப்பண்ணும் பரமாத்மாவை அடைக்கலம் புகுகிறேன்'' என்கிற போதும் இந்த ''சரணம் ப்ரபத்யே'', வருகிறது. ஆனால் ரந்தி தேவன் என்ன சொன்னான்? ''ஆர்த்திம் ப்ரபத்யே'' என்றான். 'ஆர்த்தி' என்றால் துன்பம், இன்னல், கஷ்டம். பரமாத்மா என்னை அப்படியே ஆட்கொள்ளட்டும் என்று சொல்லாமல், ''ஜீவகோசத்தின் சகல கஷ்டமும் என்னைப் பூராவாக ஆட்கொண்டு என்னிடமே வந்து சேரட்டும். நான் லோகத்தின் கஷ்டத்துக்கு சரணாகதி பண்ணுகிறேன்'' என்று பரமத் தியாக நிலையில் இருந்து கொண்டு சொல்கிறான்.

(தொடரும்)

# ஆரோக்கியமான உங்கள் கேசத்தின் சுகம்...அதுவே அவளது விருப்பம்!

உங்கள் தலையிலுள்ள கேசம் வளமாக இருப்பதுடன் அழகுறவும் ஆரோக்கியமானதாகவும் இருக்க வேண்டும். துடிப்பூட்டுவதாகவும் வசீகரமானதாகவும் இருக்க வேண்டும். தலையை வாரும்போது உங்கள் விருப்பத்திற்கேற்றவாறு படியவேண்டும்.

அதற்குத் தேவை புரதம் செறிந்த பிரில்க்ரீம். அது கேசத்திற்கு ஆரோக்கிய மூட்டுவதோடு, அதை நன்கு படியவும் வைக்கிறது.







பிரில்க்ரீம் 'பிசுபிசு'வென்று ஒட்டுவதில்லை. எண்ணெய்ப் பிசுக்கற்றது. அது கேசத்தை அழகுறப் படிய வைக்கிறது, விளைவு: அவளது விரல்கள் உங்கள் அழகான கேசத்தை அன்போடு வருடத்துடிக்கின்றன.

கேசத்தின் வேர்களுக்கு வலிவூட்டுவதற்கும் ஊட்டமளிக்கவும் பிரில்க்ரீமில் புரதம் சேர்க்கப் பட்டுள்ளது. கேசம் ஆரோக்கியத்துடன் இருந்தாலே அதை அழகுற வாரிப் படிய வைக்க முடியும்.

மிடுக்காகத் தோற்றமளியுங்கள்.

புரதம் செறிந்த பிரில்க்ரீம் உபயோகியுங்கள்,

புரதம் செறிந்த **பிரில்க்ரீம்**

அழகான முடிக்கு ஆரோக்கியமான வழி.

BRL-9811



ஃப்ளோர் ஃபேன்



ஸ்டாண்டு ஃபேன்

# ஓரியண்ட்

## காற்றிற்கு அழகூட்டும் ஃபேன்கள்

இந்தியாவில் ஃபேன்கள் தயாரிப்பதில் அனுபவ மிருந்தவர்களால் செய்த ஓரியண்ட் ஃப்ளோர் மற்றும் ஸ்டாண்டு ஃபேன்கள் தனிப்பட்ட சௌக ரியத்தை மனத்திற் கொண்டு தயாரிக்கப்பட்டுள் ளன. எந்த அமைப்பிற்கும் பொருந்துகின்ற எடுப் பான தோற்றம் கொண்ட இந்த ஃபேன்கள் கூட்காரும் பெரிய அறைகள், ஆபீஸ்"கள், வராந் தாக்கள் லான்ஸ்,போர்டு (குழுகூடும்) அறைகள் மாநாடு ஹால்கள், நீண்ட வரிசையில் நிறைய குளிர் காற்று தேவையான இடங்கள் ஆகியவற் றிற்கு மிகச் சிறந்தவை. அனைத்துத் தயாரிப்பு நிலைகளிலும் கண்டிப்பான தரக்கட்டுப்பாடுடன் இடைவிடாத ஆராய்ச்சியும் அபிவிருத்தியும் செய்திருப்பதால் ஆண்டுக் கணக்கில் அசை வற்றும் அமைதியாகவும் தொந்தரவு இல்லா மலும் உழைக்கின்றன.

இரண்டு வருட உத்தரவாதம்.

**ஓரியண்ட்**
**விசிறிகள்**

**நீண்டகாலமிருக்கும் ஃபேன்கள் வாழ்நாள் முழுதுமான சிக்கனத்திற்கு**

ஓரியண்ட் ஜெனரல் இண்டஸ்ட்ரீஸ் லிட். 6, லோர் பிபி லேன், கல்கத்தா 700 054

தொழிற் சாலைகள் :கலகத்தா மற்றும் பரிதாபாத்

CC/OGI-2/78 TAM




## அத்தியாயம் 17

# "உனக்கும் காதலா?"

ஹோம்ரூல் கோபாலகிருஷ்ணன் வீட்டிலிருந்து பவானி வெளியே வந்தபோது தன் காரில் டிரைவர் ஆசனத்தில் யாரோ உட்கார்ந்திருப்பது சாலை விளக்கின் மங்கிய ஒளியில் அவளுக்குத் தெரிந்தது. காரைப் பூட்டாமல் சாவியை மட்டும் எடுத்துக் கொண்டு போனது தவறு என்று தோன்றியது. கூடவே அனுமதி இன்றிக் காருக்குள் ஏறி அமர்ந்திருக்கும் நபர்மீது கோபமும் பொத்துக் கொண்டு வந்தது. ஒரு வக்கீலின் வாதத் திறமைகளை யெல்லாம் காட்டி அவனுடன் சண்டை பிடிக்கும் நோக்கத்துடன் அவள் பரபரப்பாக அடியெடுத்து வைத்தாள். ஆனால் காரை நெருங்கியபோது அது சிறுவன் விசு என்பதையும் அவன் புதுக் காரைத் தான் ஓட்டுவதாகக் கற்பனை செய்து கொண்டு "டிர்ர்ர்... டிர்ர்!" என்று சத்தப்படுத்திய படியே ஸ்டியரிங்கை அசைப்பதையும் கண்டாள். அவளுக்குக் கோபிக்க மனம் வரவில்லை. என்றாலும் விளையாட்டாக "யாருடா அவன், காரிலே விஷமம் பண்ணுகிறது! போலீஸைக் கூப்பிடட்டுமா?" என்று அதட்டினாள்.

"ஓ, பேஷாகக் கூப்பிடு, பவானி அக்கா! சாலையின் வலது பக்கம் வண்டியை நிறுத்தியிருக்கிறாயே, வந்து பார்க்கட்டும், போலீஸ் இன்ஸ்பெக்டர். பத்து ரூபாய்தான் ஃபைன். பவானி பி.ஏ. பி.எல்.லின் வாதத் திறமை ஒன்றும் அங்கே பலிக்காது!" என்றான் விசு.

"அட போக்கிரி! ரூல்ஸெல்லாம் நல்லாத் தெரிந்து வைத்திருக்கிறாயே!" என்றாள் பவானி.

"அது மட்டுமில்லே, கார் ஓட்டவே எனக்குத் தெரியும். ஆனால் சாலை தெரிந்தால் கால் எட்டாது; கால் எட்டினால் சாலை தெரியாது. மத்தப்படி கியர், பிரேக், கிளச் சப்ஜாடா கச்சிதமா எனக்குத் தெரியும்."

"பலே பேஷ்! கெட்டிக்காரன்தான். நகரு சொல்கிறேன். உன்னை வீட்டில் விட்டு விட்டுப் போகட்டுமா?"

"சரி அக்கா." அவன் நகர்ந்து கொண்டான். "ஸ்டியரிங்கைப் பிடித்துக் கொண்டு வரட்டுமா?"

"ஐய்யய்யோ! புது கார்! எங்கேயாவது மோதிவிட்டால்?"

"ஒன்றும் ஆகாது பவானி அக்கா! நீயும் பிடிச்சுக்கோ, நானும் பிடிச்சுக்கிறேன். கொஞ்ச தூரம், என்ன? ப்ளீஸ்!"

"ஆல்ரைட், அதோ அந்த இரண்டாவது விளக்குக் கம்பம் வரைதான்" என்ற பவானி காரைக் கிளப்பினாள். விசு அவள் அருகே ஆசனத்தின் மீதே மண்டியிட்டு ஸ்டியரிங்கைப் பிடித்துக் கொண்டான்.

"அது சரி, நீ இங்கே எப்படி வந்து சேர்ந்தாய்?" – பவானி கேட்டாள்.

"கல்யாணம் மாமாதான் என்ன உதவி வேண்டுமானாலும் தம்மை வந்து பார்க்கும்படி சொல்லியிருக்கிறாரே. அதனால்தான் வந்தேன். நீங்க காரை விட்டு இறங்கி உள்ளே போவதைப் பார்த்தேன். புதுக் கார் ஜோரா இருக்கு அக்கா."

"என்ன உதவி இப்போ தேவைப்பட்டது கல்யாணத்திடம்?"

"கிணற்று ஜகடைக்குக் கிரீஸ் போடணுமாம். கிங் கிங் என்று சத்தம் போடறதாம். அக்காவுக்கோ எனக்கோ எட்டலே. கிணற்று மதில் மேல் ஏறி நிற்கப் பயம். அதனால் கல்யாணம் மாமாவை அழைத்துக்கொண்டு வருமாறு கமலாக்கா சொன்னாள். இங்கே வந்தா அந்தச் செல்லம் மாமி வள்ளுன்னு

விழுந்து விரட்டறு. பேர்தான் செல்லம் வெல்லம் என்று.''

''இன்னும் இரண்டு நாட்களிலே வந்துவிடுவார் கல்யாணம் மெட்ராஸிலேருந்து. சொல்லி அனுப்பறேன்'' என்றாள் பவானி.

''இரண்டு நாளென்ன இருபது நாட்கள் கழித்து வேணுமானாலும் வரட்டும். ஒன்றும் அவசரமில்லை'' என்றான் விசு. ''இன்று ஜூகடை கிங் கிங் என்று கத்தினால் கத்திட்டுப் போகட்டும். யாருக்கு நஷ்டம் அல்லது கஷ்டம்?''

''அது சரி'' என்று சிரித்தாள் பவானி. ''சரியாக உட்கார். ஊர்வலம் போனது போதும். வேகமாய் விடலாம் வண்டியை.''

விசு ஸ்டீயரிங்கிலிருந்து கரத்தை எடுத்து விட்டு அமர்ந்தான்.

''கஷ்டமோ நஷ்டமோ இல்லை என்றால் கிரீஸ் போட எதற்குக் கல்யாணம் மாமாவைக் கூப்பிட வந்தாய்?'' என்றாள் பவானி.

''ஐய்யய்யே இதுகூடப் புரியலையா உனக்கு? கமலா அக்காவுக்குக் கல்யாணம் மாமா மேலே லவ்! அவரை அடிக்கடி பார்க்கலேன்னு இவளுக்குப் பித்துப் பிடித்த மாதிரி ஆயிடும். அதனால்தான், ஆணி அடிக்கணுமா கல்யாணம் மாமாவைக் கூப்பிடு. துணி உலர்த்தக் கம்பி கட்டணுமா கல்யாணம் மாமாவைக் கூப்பிடுன்னு என் பிராணனை வாங்கறா.''

பவானிக்கு அடக்க மாட்டாமல் சிரிப்பு வந்தது. வியப்பாகவும் இருந்தது. ''இந்தா விசு! நீ சின்னப் பையன். இப்படி யெல்லாம் பேசக் கூடாது'' என்றாள்.

''கமலா அக்காவுக்குக் கல்யாணம் மாமா மேலே லவ் என்றால் உங்களுக்கு ஏன் இவ்வளவு கோபம் வரது? உங்களுக்கும் கல்யாணம் மாமா மேலே லவ்வா?'' என்றான் விசு.

'' ஏய், அசடு! சினிமா டிராமாவிலே எதையாவது பார்த்துவிட்டு உளறாதே! சமர்த்தா இருக்கணும். புரிந்ததா?''

''சரி'' என்றான் விசு.

இதற்குள் வீடு வந்து விட்டது. விசு கீழே இறங்கிக் கோபத்தோடு வேகமாகப் படாரென்று கதவைச் சாத்தினான். பவானிக்குத் தூக்கி வாரிப் போட்டது. உடம்பெல்லாம் வெலவெலத்து விட்டது! அவளை அதட்டியதற்குப் பழி வாங்கி விட்டானே! புத்தம் புதுக் கார். கதவு கழன்று விழாததே அதிசயம்தான்.

ஒரு பக்கம் கோபமும் ஒரு பக்கம் அவன் போக்கிரித்தனத்தை நினைத்துச் சிரிப்பும் பொங்க அவள் கீழே இறங்கினாள். வீட்டுக்குள் நுழைவதற்கு முன் இம்முறை கார் இடதுபுறமாக நிற்கிறதா என்று பார்த்துக் கொண்டு சரியாகப் பூட்டிக் கொள்ளவும் செய்தாள்.

## அத்தியாயம் 18

# அந்தப்புரத்தில் அரசிளங்குமரிகள்

''**வா**ம்மா பவானி! இந்த ஊர் எல்லைக்குள் நுழைந்ததுமே மகா லட்சுமி மாதிரி எதிரே வந்து நின்றாய். உடனேயே ஜாகை வசதி கிடைத்தது. அந்தப் பிள்ளை கல்யாணம் தங்கக் கம்பி. ரொம்ப ஒத்தாசையாக இருக்கிறான்'' என்று கூறிப் பவானியை வரவேற்றாள் காமாட்சி.

''இன்னும் உங்களுக்கு என்னென்ன உதவி வேணுமோ எல்லாவற்றையும் அவரையே கேளுங்கள்'' என்றாள் பவானி.

''அப்படி ஒன்றும் அதிகமாக உபகாரம் தேவையில்லை. விசுவைப் பள்ளிக்கூடத்தில் சேர்த்து, அவன் அப்பாவுக்கு ஓர் உத்தியோகத்தைப் பார்த்துக் கொடுத்து, இந்தப் பெண்ணுக்கு ஒரு கல்யாணத்தையும் பண்ணி வைச்சுட்டாப் போதும்.''

''முதல் இரண்டு காரியங்களும் கஷ்டப்படலாம். மூன்றாவது முடிந்த மாதிரிதான். கட்டாயம் சுலபமாக நடந்துவிடும். கல்யாணசுந்தரம் இருக்கிறாரே அவரே பிரும்மச்சாரிதான். உங்கள் பெண்ணுக்குத் தகுந்த வரன்.''

''ஆனால் அவர்கள் குடும்பம் பணக்காரக் குடும்பம் அது இது என்கிறார்களே.''

''அதனால் என்ன? மிஸ்டர் கல்யாணசுந்தரத்துக்கு ஏழை பணக்காரர் என்ற வித்தியாசமே கிடையாது. தீவிர சோஷலிஸ்ட். அவர் அப்பா மட்டும் தடுக்கவில்லை என்றால் சொத்தையெல்லாம் தானம் பண்ணி விடுவார். நாட்டில் ஏழைகள், பரம ஏழைகள் என்ற இரண்டே வகுப்பார்தாம் இருக்க வேண்டும் என்பது அவர் சித்தாந்தம். அந்த அளவுக்குச் சமூக சீர்திருத்த ஆர்வம் கொண்டவர். உங்கள் பெண்தான் என்ன சாமானியப்பட்டவளா, அவள், அழகு, சமர்த்து, அறிவு, படிப்பு...''

''கடைசியாகச் சொன்னது மட்டும் அக்காவிடம் கிடையாது. பூஜ்யம்'' என்றான் விசு.

''தடிப்பயலே! சும்மா இரு. நீ ஒருத்தன் படித்துக் குப்பை கொட்டினால் போதும்'' என்றார் மாசிலாமணி.

''உண்மையைச் சொன்னாலே எல்லோருக்கும் கோபம்தான் வரும்'' என்றான் விசு.

''விசு! அக்கா எதுவரை படித்திருக்கிறாள்?'' —பவானி கேட்டாள்.

''எட்டாவதோடு படிப்புக்குக் கொட்டாவி விட்டுவிட்டாள்.''

''அதற்கு மேல் பெண்களுக்குப் படிப்பு எதற்கு என்று நிறுத்தி விட்டோம்'' என்றார் மாசிலாமணி.

''நீ என்ன நினைச்சுண்டாலும் சரி பவானி, அந்த விஷயத்திலே நாங்க கொஞ்சம் கர்நாடகம்தான்'' என்றாள் காமாட்சி.

''நினைக்கிறது என்ன? இதெல்லாம் அவரவர் மனசையும் சூழ்நிலை சந்தர்ப்பங்களையும்



இதைக் கேட்டுக் கொண்டே இருந்த கமலாவின் மேனி சிலிர்ப்பதைப் பவானி ஓரக் கண்ணால் பார்த்துப் புன்னகை பூத்தாள். அவள் விடைபெற்றுச் செல்ல முற்பட்டபோது, ''குங்குமம் கொடேன் கமலா!'' என்றாள் காமாட்சி. ஏதோ கனவுலகிலிருந்து விடுபட்டவள் போல் திடுக்கிட்டுக் கமலா அவசரம் அவசரமாக எழுந்து போய்க் குங்குமச் சிமிழை எடுத்து வந்து நீட்டினாள்.

பவானி நெற்றிக்கு இட்டுக் கொண்டு புறப்பட்டபோது வாசல்வரையில் வழியனுப்ப வந்த கமலா, ''அடிக்கடி வந்து கொண்டிருங்கள் அக்கா!'' என்றாள்.

''வருகிறேன். ஆனால் இங்கே வரலாமா அல்லது ஏலமலைப் பாதையில் பத்தாவது

பொறுத்தது. கால மாறுதலுக்கு ஏற்ப நாளடைவில் மன மாற்றங்களும் நடக்கும். நிதானமாகப் படிப்படியாகத்தான் ஏற்படும். ஒரு விதத்தில் பார்த்தால் நீங்க கமலாவின் படிப்பை எட்டாவதோடு நிறுத்தியதே நல்லதுதான்.''

''ஏன், எப்படி?'' என்று மாசிலாமணி தம்பதி ஏகோபித்துக் கேட்டனர்.

''கல்யாணசுந்தரத்தின் தாயாருக்குப் படித்த பெண்களைக் கண்டாலே பிடிக்காது! அதிகம் படிக்காது, குடித்தனப் பாங்காக இருக்கும் நாட்டுப் பெண்ணாகத் தனக்கு வர வேண்டும் என்று அந்த அம்மாவுக்கு ஆசை.''

மணியம் செல்வன்

மைல் கல்லில் மொட்டைப் பாறை ஒன்று இருக்கிறதே அங்கே சந்திப்போமா?'' என்றாள் பவானி. ''அங்கே யென்றால் மனம் விட்டுப் பேசலாம் இல்லையா?''

கமலா அதிர்ச்சி அடைந்தவளாக, ''நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?'' என்றாள்.

''அடி கள்ளி! எனக்கு ஒன்றும் தெரியாது என்று நினைக்கிறாயா? பூனை போலிருந்து கொண்டு புலி போல் பாய்கிறவளாயிற்றே நீ. நானே காரில்கூடத் தனியாகப் போகத் தயங்குகிறேன். அம்மாதிரி ஏகாந்தமான இடங்களுக்கு நீ பஸ்ஸில் ஒருவருக்கும் தெரியாமல் போய் விட்டு வருகிறாய்!''

''அக்கா! மெதுவாகப் பேசுங்கள். அம்மா காதில்விழுந்தால் தோலை உரித்துவிடுவாள்.''

குரலைச் சற்றுத் தாழ்த்திக் கொண்ட பவானி, ''அடுத்த தடவை இரண்டு பேரும் இந்தக் காரில் சேர்ந்தே போவோம். பொழுதோடு போய்விட்டு இருட்டுவதற்குள் திரும்பி விடுவோம். என்ன சொல்கிறாய்?'' என்றாள்.

''சொல்ல என்ன இருக்கிறது? நான் எப்போதும் தயார். எனக்கென்ன கோர்ட்டா, ஆபீஸா? வெட்டிப் போது போக்கிக் கொண்டிருக்கிறேன்'' என்று சற்றே ஆதங்கம் குரலில் எட்டிப் பார்க்கப் பேசினாள் கமலா. ''ஆனால் அப்பா, அம்மாதான் சம்மதிப்பார்களோ என்னவோ?''

''நான் அழைத்துப் போகிறேன் என்றால் மறுக்க மாட்டார்கள். வரட்டுமா?'' என்ற பவானி ஆயிரமாயிரம் வண்ணக் கனவுகள் காணக் கமலாவுக்கு வழிவகுத்து விட்டுக் காரில் ஏறிச் சென்றாள்.

**ம**லை அரசனுடைய ராஜ்யத்தின் தலைநகர் போல விளங்கியது அந்தப் பகுதி. காப்பித் தோட்டங்களின் செயற்கை எழில் பல இடங்களில் மனோரம்யமாக இருந்தது என்றால் அந்தப் பகுதிகளில் இயற்கை அழகு கொழித்துக் கொஞ்சியது. தலைநகரின் மையமான இடத்தில் ஓங்கி நின்ற அரண்மனையாக ஒரு மொட்டைப் பாறை. அரண்மனையா அது? இல்லை, அங்கு இப்போது குடியேறியிருந்த அரசிளங்குமரிகள் அந்தப்புரமாகவே மாற்றி விட்டிருந்தனர்! சரக்கொன்றை மரம் ஒன்று அவர்கள் மீது பொன் விதானம் விரித்திருந்தது. திரண்டு கொண்டிருந்த கரிய மேகங்கள் காரணமாய் வீரியம் குன்றிய மாலை நேரத்து வெய்யிலையும் அந்த விதானம் வடிகட்டி




# அட்மிஷன்–ஹாஸ்யத் துணுக்குகள்!

இளைஞன்: எனக்கு வயது முப்பத்தைந்துக்கு மேல் ஆகி விட்டது. கல்யாணம் செய்து கொள்ளலாமென்றிருக்கிறேன். தங்களுடைய 'பர்மிஷன்' கிடைத்தால் கல்யாணம் செய்து கொள்வேன்.

நர்சரி பள்ளி முதல்வர்: உங்களுடைய கல்யாணத்துக்கு என் 'பர்மிஷன்' எதற்கு ?

இளைஞன்: நான் கல்யாணம் செய்து கொண்டு, பிறக்கப் போகும் குழந்தைக்குத் தங்கள் நர்சரி ஸ்கூலில் L.K.G.க்கு அட்மிஷன் கொடுப்பீர்கள் என்று சொன்னால் கல்யாணம் செய்து கொள்வேன்.



தந்தை: என் மகன் S.S.L.C.யில் 100 மார்க்.....

ஒருவர்: அப்படியா ? ..... எந்த சப்ஜெக்டில் ?

தந்தை: எல்லா சப்ஜெக்டுகளிலும் சேர்த்து மொத்தம் 100 மார்க் வாங்கி யிருக்கிறான்!

ஒருவர்: உங்களுடைய தாத்தாவின் தங்கைவீட்டுக்காரரின் ஒன்றுவிட்ட சகோதரியின் நெருங்கிய குடும்ப நண்பரும், என்னுடைய ஒன்றுவிட்ட பெரியப்பாவின் அத்திம்பேருடைய சகோதரியின் நெருங்கிய குடும்ப நண்பரும் ஒரே ஆபீஸில் வேலை செய்கிறார்கள்.

கல்லூரி முதல்வர்: அதற்காக ?

ஒருவர்: என்னுடைய மகனுக்கு உங்கள் காலேஜில் அட்மிஷன் கொடுக்க வேண்டும்.



தலைமை ஆசிரியர்: அட்மிஷன் பாரத்தில் உன் அப்பா கையெழுத்துப் போடவில்லையே? உன் அம்மா அல்லவா கையெழுத்துப் போட்டிருக்கிறார் !

மாணவன்: அட்மிஷன் பாரத்தில் 'குடும்பத் தலைவரின் கையெழுத்து' என்று அச்சாகி யிருக்கிறது சார்! அதனால்தான் என் அம்மா கையெழுத்துப் போட்டிருக்கிறார்.

—திருச்சி ராஜமோகன்

# ஹேலோ ஷாம்பூகள்-உங்கள் கேசத்தின் பராமரிப்பிற்கெனவே...

## உங்கள் கேசம் மிருதுவாகவும், பட்டுப் போன்றும் திகழவே, உபயோகிப்பீர் ஹேலோ காஸ்மெடிக் ஷாம்பூ.

உங்கள் கேசம் இன்று போல் என்றும் அழகுடன் விளங்க உபயோகியுங்கள் ஹேலோ காஸ்மெடிக் ஷாம்பூ. இதன் விசேஷமான, சீரான, சிறந்த உத்தியினுல், உங்கள் கேசத்திற்கு இயற்கையிலேயே அமைந்துள்ள பட்டுப்போன்ற தன்மை மீண்டும் கிடைத்துக் கொண்டே இருக்கிறது.






HSR.G.4 TM

**இயற்கை ஆரோக்கியத்துடன் கூடிய கேசத்திற்கு —ஹேலோ கேசப் பராமரிப்பு!**

**ஹேலோ எக் ஷாம்பூ:** விசேஷ போஷாக்கு மிக்க இந்த ஷாம்பூவில் உள்ள வளமிக்க முட்டைப் புரதத்தின் பயனுக, உங்கள் கேசம் கட்டுக் கோப்புடன் கவர்ச்சியாகத் திகழ்கிறது.

**ஹேலோ லெமன்-ஃப்ரெஷ் ஷாம்பூ:** உங்கள் கேசத்திற்கு இயற்கையான, தூய்மையான பளபளப்பைத் தருகிறது.

**ஹேலோ கான்ஸென்ட்ரேட் ஷாம்பூ:** ஏராளமான நுரைவளத்தின் மூலம் உங்கள் கேசத்தை மென்மையாகவும், கட்டுக்கடங்கியும் வைத்திருக்க சிறிதளவே போதும்.




**ஹேலோ ஷாம்பூகள் மட்டுமே சீரான, சிறந்த உத்திரின்படி தயாரிக்கப் படுகின்றன.**

# விலை இறக்கம்

ஸுப்பர் **ரின்** ~~ரூ.1-60~~

# இப்போது ரூ.1-45 தான்

(வரிகள் தனி)




மின்னலடிக்கும் ஸுப்பர் ரின் வெண்மை... மேன் மேலும் அதி வெண்மை.

அனுப்பி அதே காரணத்தால் தனது தங்கத் தோற்றம் மேலும் தகதகக்கக் கண்டது. அருகிலேயே ஓர் அரச மரம் சாமரம் வீசுவதுபோல் அசைந்தாடிச் சலசலத்தது. ராமப்பட்டணத்தை யொட்டியிருந்த பெரியதோர் ஏரி மீதாகத் தவழ்ந்து வந்த மலயமாருதம் இருவர் மேனியையும் குளிர்வித்தது. அடிமரத்தில் ஒய்யாரமாகச் சாய்ந்திருந்த அவ்விருவரும் அரசிளங்குமரிகளா அல்லது வனதேவதைகளேதானா? கமலா தன்னிடமிருந்த சொற்ப ஆடைகளிலேயே மிகவும் புதிதான ஒன்றை அணிந்திருந்தாள். இதை ஒரு விசேஷ தினமாகக் கருதி, வழக்கத்தை விடச் சிரத்தையுடன் ஒப்பனைகளையும் கவனித்துச் செய்து கொண்டிருந்தாள். பவானி இந்தப் பயணத்துக்காக விசேஷ சிரத்தை ஏதும் தன்னை அலங்கரித்துக் கொள்வதில் காட்டவில்லை. என்றாலும் சாதாரணமாகவே அவள் நவீன நாகரிகங்களிலும் அன்றைய நாகரிகத்தை அறிந்தவள். ஒன்று பச்சைக் கிளி என்றால் மற்றது மாடப் புறா. ஒன்று மஞ்சள் சாமந்தி, மற்றது இளஞ்சிவப்பு ரோஜா. ஒன்று கும்மிக் கீதம், மற்றது இங்கிலீஷ் டியூன்! ஒருத்தி அல்லிராணி, மற்றொருத்தி கிளியோபாத்ரா!

ஏகாந்தச் சூழல் அளித்த சுதந்திர உணர்வு அவர்களை ஏதேதோ மனோராஜ்யங்களில் பறக்கச் செய்தது. அதே சமயத்தில் ஒருவித நெருக்கத்தையும் பிணைப்பையும் அவ்விருவரிடமும் உண்டாக்கி அடிமைப்படுத்தவும் செய்தது.

''மழை வருமோ?'' என்றாள் கமலா.

''வரலாம். இம்மாதிரி சில்லென்று காற்று வீசும்போது உன் பக்கத்தில் நான் இருந்து என்ன பிரயோசனம்? கல்யாணம் அல்லவா இருக்க வேண்டும்?'' என்றாள் பவானி.

''அக்கா! உண்மையாகத்தான் பேசுகிறீர்களா? அல்லது என்னை ஏமாற்றுகிறீர்களா? அனாவசியமாக என் ஆசைகளை வளர்த்து விட்டால் அது மோதிச் சிதறும்போது என் இதயமும் சுக்கு நூறாக உடைந்து போகும்.''

''கமலா! கல்யாணம் உன்னை ஏற்றுக் கொள்வார் என்று என்னால் சத்தியம் செய்து தரவா முடியும்? ஆனால் கல்யாணம் உன்னை மனைவியாக அடையக் கொடுத்து வைத்திருக்க வேண்டும், என்பேன். அவர் உன்னை மறுக்க எந்தக் காரணமும் எனக்குத் தோன்றவில்லை. நீங்கள் இருவரும் திருமணம் செய்து கொண்டால் உங்கள் இல்வாழ்க்கை தெளிந்த நீரோடை போல் இனிமையாகத் தங்கு தடையின்றி ஓடும். உங்களை இணைத்து வைக்க நான் என்னால் முடிந்ததை யெல்லாம் செய்வேன்.''

''அன்று நீங்கள் வீட்டுக்கு வந்து என் ஆசைக்குத் தூபம் போட்டுவிட்டுப் போனதிலிருந்து நான் இந்த உலகத்திலேயே இல்லை, அக்கா!''

''கல்யாணத்துடன் கரம் கோத்துக் கற்பனை உலகில் சஞ்சரித்துக் கொண்டிருந்தாயாக்கும்! என்னவெல்லாம் விளையாடினீர்கள்? எல்லாவற்றையும் ஒன்று விடாமல் இப்போது சொல்லியாக வேண்டும் எனக்கு!''

''மகிழ்ச்சிக் கடலில் மிதந்தேன். திடீரென்று அதுவே துயரக் கடலாகவும் மாறியது. அதில் மூழ்கிப் போனேன்.''

''துயரமா? என்ன துயரம் உனக்கு?''

''இத்தனை அன்பான ஓர் அக்காவைத் தெய்வமாகப் பார்த்து என்னிடம் அனுப்பி வைத்திருக்கும்போது அவளைச் சரியாகப் புரிந்து கொள்ளாமல் அவள் மீது சந்தேகித்துக் கோபதாபப் பட்டும் பொறாமையால் வெந்துருகியும் பலவிதமாகச் சபித்தோமே என்று என்னை நானே நொந்து கொண்டு அழுது தீர்த்தேன்!''

இப்படிக் கூறி வரும்போதே கமலா மீண்டும் பொல பொலவென்று கண்ணீர் உகுத்தாள்.

''அசடே! எதற்கு என்னைச் சபித்தாய்? ஏன் இப்போது அழுகிறாய்? நிறுத்து, சொல்கிறேன்'' என்று அதட்டும் பாவனையில் பேசிய பவானி தன் புடவைத் தலைப்பால் கமலாவின் முகத்தை ஒற்றினாள்.

''நீங்களும் அவரும் சேர்ந்து சேர்ந்து காரில் போவது வருவதைப் பார்த்தும் பேசிப் பழகுவதைக் கண்டும் பொறாமைப் பட்டேன் அக்கா! என் நல்வாழ்வைப் பறித்துக்கொண்டு போக வந்த பரம விரோதியாக உங்களை எண்ணினேன். மனதுக்குள் உங்களைச் சபித்தேன். தாறுமாறாகத் திட்டினேன். அக்கா! என்னை மன்னிப்பீர்களா?'' என்று கேட்ட கமலா பவானியின் மடியில் விழுந்து முகத்தைப் புதைத்துக் கொண்டு குலுங்கிக் குலுங்கி அழலானாள்.

(தொடரும்)

## கௌரி பூஜை



கல்யாணமாகாத கன்னிகைகள் கௌரி பூஜை செய்தால் விரைவில் விவாகமாகும். அவர்கள் மனத்தால் வரிக்கும் வரனே கணவனாகக் கிட்டுவான். பரந்தாமனையே பதியாக அடைய ருக்மிணி கௌரி பூஜை செய்தாள்; பரமாத்மாவே நேரில் வந்து அவள் கரம் பற்றினான். புனிதமான கௌரி பூஜையே இவ்விதழ் அட்டையை அலங்கரிக்கிறது.

வண்ணப்படம் : தூரலிங்கம்



## அத்தியாயம் 11

# சந்நிதியில் தியாக நிதி

மார்த்தாண்ட வர்மனின் திகைப்பு நீங்கு முன்னரே ஸ்ரீவல்லபர் கேட்டார்:

''தம்பி! திருவமுது ஏதேனும் உண்டா?''

கிருஷ்ணன் நம்பூதிரி பணிவோடு சொன்னான்:

''இதோ ஒரு நொடியில் தயாரித்து விடுகிறேன்.''

ஸ்ரீவல்லபர் சொன்னார்:



''இந்த நேரத்தில் உனக்கு ஏன் தொல்லை? காலையில் பார்த்துக் கொள்ளலாம்.''

கிருஷ்ணன் நம்பூதிரி சொன்னான்:

''தேவரீர் வருவதை அடியேன் முன் கூட்டியே அறிய மாட்டேன். அறிந்திருந்தால் அடிசில் படைத்துத் தயாராக வைத்திருப்பேன். ஆயினும் கவலையில்லை சுவாமி! எனது இல்லாளுக்கும் இவ்விடமே உறைவிடம். நீங்கள் சிரம பரிகாரம் செய்து கொள்ளும் நேரத்திலேயே அமுது தயாராகிவிடும்.''

இப்படிச் சொல்லிவிட்டுக் கிருஷ்ணன் நம்பூதிரி உள்ளே ஓடினான்.

அவன் சென்றதும் ஸ்ரீவல்லபர் மார்த்தாண்ட வர்மனைத் திரும்பிப் பார்த்தார்...மெல்லச் சிரித்தார்.

''உலகத்தில் ஒரே மாதிரி உருவம் படைத்த சிலரும் இருக்கிறார்கள். வைகுந்த நாயகன் கைரேகை ஒன்றில் தான் பேதம் காட்டி யிருக்கிறான்'' என்றார்.

மார்த்தாண்ட வர்மன் மெதுவாகச் சிரித்தான்.

''நாயகன் ஒரே நேரத்தில் மண்ணெடுத்து இரண்டு பிரதிபிம்பங்களைச்

# சேரமான் காதலி

செய்திருக்கிறான். இது எதற்கோ...?'' என்றபடி உள்ளே நடந்தார் ஸ்ரீவல்லபர்.

உள்ளே சென்று திரும்பிய கிருஷ்ணன் நம்பூதிரி மார்த்தாண்ட வர்மனையும், மெல்லிளங்கோதையையும் ஒரு தனி மண்டபத்தில் இருக்கை செய்வித்தான்.

கோவிலின் பின்பகுதி வெளிப் பிராகாரத்தில், உயர்த்திக் கட்டப்பட்டிருந்த திண்ணையின் மீது ஸ்ரீவல்லபரும் சீடர்களும் அமர்ந்தார்கள். அந்த இடத்தில் காற்று சுகமாக வீசியது.

அத்தகைய காற்றை அகஸ்தீசுவரம் காட்டிலும் சுவாசித்துப் பழக்கப்பட்டவரல்லவா அவர்!

**கண்ணதாசன்**

பளபளப்பாக இருந்த திண்ணையில் மண்ணாலேயே கட்டப்பட்ட திண்டின் மீது தலை வைத்தபடி அவர் சாய்ந்தார்.

இரண்டு சீடர்கள் அவரது காலடியில் வந்து அமர்ந்தார்கள்.

''வலி ஏதுமில்லை. நீங்களும் சிரம பரிகாரம் செய்து கொள்ளுங்கள்'' என்றார், அவர்.

மார்த்தாண்ட வர்மனும், மெல் லிளங்கோதையும் தனி மண்டபத்துக் குள் நுழைந்தார்கள்.

அந்த மண்டபம் சில நாட்களாக மூடப்பட்டிருந்தது போலும்! அங்கே இரண்டு நாகங்கள் அவர்களைக் கண்ட தும் படமெடுத்து ஆடின.

மெல்லிளங்கோதை அதைப் பார்த்த தும், 'வீல்' என்று சத்தமிட்டுவிட்டாள்.

''பயப்படாதே. மீன் இல்லாத குளமா? மான் இல்லாத வனமா? நாகம் இல்லாத கோவிலா? பாம்பணை யில் துயில் கொண்டான் ஐயன். பாம் பின்மீது நடனமிட்டான் கண்ணன். அவனைப் பார்க்க வந்திருக்கின்றன, இந்த நாகங்கள்'' என்றான், மார்த் தாண்ட வர்மன்.

''நாகம்மா, போய்விடு'' என்றாள், மெல்லிளங்கோதை.

சத்தியத்துக்குக் கட்டுப்பட்டவை போல் அந்த நாகங்கள் ஊர்ந்து வெளியேறின.

''பிரபு, இருண்ட மண்டபம்; மங்கிய வெளிச்சம்; இன்னும் என்னென்ன இருக்குமோ? எனக்கு அச்சமாக இருக் கிறது'' என்றாள் மெல்லிளங் கோதை.

''மணம முடிக்கும் வரைதான் பெண் ணுக்கு அச்சம். அது இன்னும் இருக் கிறதா மிச்சம்! மகுடியின் முன் நாகம் போல் உனக்கு நான் அடங்கி யிருக் கிறேன். உன் அச்சத்தைத்தான் எனக் குக் கொடுத்து விட்டாயே! இன்னும் ஏன் நடுங்குகிறாய்?'' என்று கேலி செய் தான் மார்த்தாண்ட வர்மன்.

''கேலி செய்யாதீர்கள். இங்கே தனி யாகத் துயில் கொள்ள என்னால் ஆகாது!'' என்றாள், மெல்லிளங்கோதை செல்லமாக.

''என் மார்பு உன் மாளிகை. என் கரங்கள் உன் காவல். தீண்டும் எவை யும் என்னையே தீண்டட்டும்'' என்ற மார்த்தாண்ட வர்மன் அதை நடித்தும் காட்டினான்.

மெல்லிளங் கோதை சூழ்நிலையை மறந்தாள். அவள் மேனி கதகதப் பாயிற்று. உடலிலே மெதுவாக அனல் பறப்பது போலிருந்தது.

அங்கே...

கிருஷ்ணன் நம்பூதிரியின் மனைவி கல்யாணி அடுப்பேற்றி அதிலே உலை யேற்றி வைத்தாள். உடனிருந்து அவ ளுக்குத் துணை புரிந்தான் கிருஷ்ணன் நம்பூதிரி.

'சுவாமிக்குப் பசிக்குமே, பசிக்குமே' என்றெண்ணியபோது அடுப்பில் எரியும் அனலுக்கும் சக்தி இல்லாதது போல் அவனுக்குத் தோன்றியது.

உலையைக் கிளறியவாறே, ''வந் திருப்பது யாராம்?'' என்று கேட்டாள் கல்யாணி.

''யாரென்று எப்படிக் கேட் பது? பார்த்தால் ராஜ குடும் பம் போல் தெரிகிறது. நாம் இந்தக் கோவிலுக்குள்தானே



அடைபட்டுக் கிடக்கிறோம்! யாரென்று கண்டோம்?'' என்றான் கிருஷ்ணன் நம்பூதிரி.

''எத்தனை பேர் வந்திருக்கிறார்கள்?'' என்று கேட்டாள் கல்யாணி.

''நல்லவேளை. உலையை இறக்கிய பிறகு கேட்காமல் போனாயே! ஒரு சுவாமி; ஏழு சீடர்கள். ராஜ குமாரன் போல ஒரு வாலிபன். திருமகளின் வடிவாகவே அமைந்த ஓர் இளமங்கை. அந்த மங்கை அந்த யௌவன புருஷனின் மனைவி போல் தெரிகிறது'' என்றான் கிருஷ்ணன் நம்பூதிரி.

''அந்த மங்கை என்னை விட அழகா?'' என்று கேட்டாள் கல்யாணி.

''உன்னை விட ஓர் அழகு உலகத்திலேயே இல்லை—என் கண்களுக்கு'' என்றான் கிருஷ்ணன் நம்பூதிரி.

வலது கைக் காப்பைக் கொஞ்சம் பின்னால் தள்ளிக் கொண்டு, கணவன் நறுக்கிய காய்கறிகளைப் பாத்திரத்தில் போட்டபடி, ''சரி. அவர்கள் ஏறி வந்த குதிரைகளுக்குக் கொள்ளு வைக்கவில்லையே!'' என்றாள் கல்யாணி.

அப்பொழுதே அதை நினைவுகூர்ந்த கிருஷ்ணன் நம்பூதிரி கொள்ளுப் பாத்திரத்தை எடுத்துக் கொண்டு வெளியே ஓடினான்.

அங்கே குதிரைகள் நிறுத்திய இடத்திலேயே நின்று கொண்டிருந்தன.

அத்தனை குதிரைகளின் முகக் கயிற்றைப் பிடித்தபடி கொஞ்ச தூரம் நடத்திக் குதிரைகள் கட்டுவதற்காக அடிக்கப்பட்ட முளைகளில் அவற்றைக் கட்டினான். பிறகு வைத்த இடத்திலிருந்து பாத்திரத்தை எடுத்து வந்தான்.

பாத்திரத்தை அவன் குதிரைகளின் முன்னால் வைத்ததும் மேலும் சில குதிரைகளின் குளம்படி ஓசை கேட்டது. 'இன்னும் சில அதிதிகள் வருகிறார்கள்' என்று தனக்குள் சொல்லிக் கொண்டான்.

'சரி; வருகிறவர்கள் இங்கேதானே வரப்போகிறார்கள்' என்று எண்ணியபடி உள்ளே நுழைந்தான்.

அந்தக் குளம்படி ஓசை தனி மண்டபத்தில் படுத்திருந்த மார்த்தாண்ட வர்மனுக்கும் மெல்லிளங்கோதைக்கும் கேட்டது.

பின் திண்ணையில் படுத்திருந்த ஸ்ரீ வல்லபருக்கும், சீடர்களுக்கும்கேட்டது.



யார் அவர்கள்?

ரவிவர்மனின் படைகளில் ஒரு பிரிவாக இருக்குமா?

அங்கே மார்த்தாண்ட வர்மனுக்குத் தோன்றிய அதே ஐயம் இங்கே ஸ்ரீ வல்லபருக்கும் தோன்றியது.

ஸ்ரீவல்லபர் தம் சீடர்களில் திறமையுள்ள ஒருவனை அழைத்து, "ஒரு புரவியில் ஏறி, அவர்கள் யார்? எந்தப் பக்கம் வருகிறார்கள்? என்பதைக் கவனித்து முன்னால் வா!" என்று அனுப்பினார்.

சீடன் குதிரையில் ஏறி வெகு வேகமாகக் காட்டுக்குள் பறந்தான்.

பாம்புகள் சீறும் ஓசை, பறவைகளின் ஒலி, புலிகள் உறுமும் சத்தம், காற்றிலே மரங்கள் ஆடும் ஓசை; இவற்றுக்கு நடுவே அந்த ஒற்றைக் குதிரையின் குளம்படி ஓசை கேட்காதபடி அவன் வேகத்தைத் தடைப்படுத்திக் கொண்டான்.

சுமார் அரைக் காத தூரத்தில் அந்தக் குதிரைகள் வந்து கொண்டிருந்தன.

இடையில் ஏரியில் தண்ணீர் தேங்கி நின்றதால், அந்த ஓசை பக்கத்தில் கேட்பது போல் கேட்டது.

கரிய நிறம் படைத்த தன் புரவியின் மீது அமர்ந்தபடி அவர்களைக் கூர்ந்து கவனித்தான் சீடன்.

அவர்கள் ரவி வர்மனின் படைகளே. அவனுக்குத் தெளிவாகத் தெரிந்து விட்டது.

மெதுவாகத் தன் குதிரையைத் திருப்பிக்கொண்டு கோவிலுக்கு வந்தான் சீடன்.

பதற்றத்தோடு பின் பக்கம் ஓடினான்.

"சுவாமி! அவை ரவிவர்மனின் படைகளே. இங்கே வருவது போலத் தான் தோன்றுகிறது" என்றான்.

ஸ்ரீவல்லபர் துரிதம் அடைந்தார்.

எழுந்து வெகு வேகமாக மடப்பள்ளி அருகே ஓடினார்.

"தம்பி, ஒரு விஷயம்!" என்றபடி உள்ளே நுழைந்தார் ஸ்ரீவல்லபர்.

கைகளைக் கட்டிக் கொண்டு எழுந்து நின்றார்கள் கல்யாணியும் கிருஷ்ணன் நம்பூதிரியும்.

ஸ்ரீவல்லபர் அவர்களிடம் தான் யார் என்பதையும், தன்னோடு வந்திருப்பது மார்த்தாண்ட வர்மனும், பட்டத்து ராணியும் என்பதையும் அவனிடம் விளக்கிக் கூறினார். படைகள் தேடி வருகின்றன என்பதையும் கூறி எச்சரித்தார்.

"மார்த்தாண்ட வர்மன் தங்கியிருக்கும் தனி மண்டபத்துக்கு நான் போகக் கூடாது. இந்த விஷயத்தை உடனே நீ போய்ச் சொல். கதவைத் தாழிட்டுக் கொண்டிருக்கும்படி அவர்களுக்குச் சொல். வருகிறவர்களுக்கு அவர்களைத் தெரியும். என்னைத் தெரியாது. அதனால் நான் வெளியே இருப்பதில் தவறில்லை. சீக்கிரம் போய்ச் சொல்!" என்றார்.

"சுவாமி! நானும் அங்கே போவது உசிதமல்ல. இருப்பினும் தங்கள் ஆணையைத் தலைமேற் கொண்டு எனது இல்லாளையும் அழைத்துக் கொண்டு செல்கிறேன்" என்ற கிருஷ்ணன் நம்பூதிரி, கல்யாணியையும் அழைத்துக் கொண்டு தனி மண்டபத்துக்குச் சென்றான்.

முன் மண்டபத்திலேயே படை வீரர்களை எதிர்பார்த்தபடி தம் சீடர்களோடு வந்தமர்ந்து கொண்டார் ஸ்ரீவல்லபர்.

கதவு திறந்தே யிருந்தது.

சுமார் நாற்பது ஐம்பது படை வீரர்கள் கோவிலின் முன் பகுதியில் குதிரையில் வந்திறங்கினார்கள். எல்லோருமே களைப்பாக இருந்தார்கள்.

கோவிலுக்குள்ளே அவர்கள் நுழைந்த விதம் ஒரு புனிதமான இடத்துக்குள் நுழைவது போல் இல்லை.

"எனது சின்னஞ் சிறிய செல்வி
துடிதுடிப்பாக ஆரோக்கியமாக மற்றும்
சுறுசுறுப்பாக வளர வேண்டும்.
ஆகையால்தான் அவளுக்கு
நாள்தோறும் போர்ன்விடா தருகிறேன்."

OBM/5800 A TM



"அவளுடன் ஈடுகொடுக்க இப்போது எனக்கு போர்ன்விடா தேவை!"

"...எங்கள் குடும்பத்தினர் அனைவருமே தினமும் இரண்டு வேளை போர்ன்விடா அருந்துகிறோம். என் கணவர் அதுதான் வேண்டுமென்கிறார். ஏனெனில், போர்ன்விடாவில் மால்ட், பால், குளுகோஸ் மற்றும் சர்க்கரையோடு, கோகோவும் சேர்ந்துள்ளது. கோகோ மிகவும் ஒன்று திரண்ட சக்தியுள்ள உணவுகளில் ஒன்று என்கிறார் அவர். தவிர, மற்ற மால்ட் கலந்த உணவுப் பானங்களைவிட, போர்ன்விடாவில் அதிக அளவில் கோகோ உள்ளது. கோகோ, போர்ன்விடாவுக்கு அதிக சுவையும் தருகிறது. என் கண்மணிக்கு போர்ன்விடா என்றால் உயிர். அவளது தசைநார்கள், எலும்புகள் மற்றும் மூளை வளருவதற்குத் தேவையான எல்லா போஷாக்குச் சத்துகளையும் அது தருவதற்கு உதவுகிறது என்பது எனக்குத் தெரியும். அதோடு, மற்ற உணவுப் பானங்களைவிட போர்ன்விடா மிகவும் சிக்கனமானது. நான் தினமும் கோப்பை ஒன்றுக்கு 2 தேக்கரண்டி நிறைய போர்ன்விடா சேர்க்கிறேன். (மற்ற எல்லா உணவுப் பானங்களைப்போல்) என்னுடைய போர்ன்விடா டின் அதிகமான நாட்களுக்கு நீடிக்கிறது.

நீங்களும் வாங்கிப் பாருங்கள் தெரியும்!




காட்பரிஸ்

**போர்ன்விடா**

சக்தி, வலிமை மற்றும்
இன்சுவை கிட்டும்
உன்னத உணவு பானம்.

ஒவ்வொரு டின்னிலும் அதிக கோப்பை,
ஒவ்வொரு கோப்பையிலும் அதிக சுவை!

இன்னிக்கி என் இண்டர்வியூவை எப்படித்தான் சமாளிக்கப் போறேனோ? எனக்குக் கடுமையான தலைவலி.

நான் சொல்றதைக் கேளுங்க, அனாஸின் சாப்பிடுங்க!

# விரைவில் நிவாரணம் பெற சக்தி வாய்ந்த, நம்பகமான அனாஸின் சாப்பிடுங்கள்

**சக்தி வாய்ந்தது :** உலகெங்கும் டாக்டர்கள் மிக அதிகமாக சிபாரிசு செய்யும் வலி நிவாரணியை அதிக அளவில் கொண்டது அனாஸின். ஆகையால்தான் அனாஸின் வலியிலிருந்து விரைவிலேயே நிவாரணமளிக்கிறது.

**நம்பகமானது :** டாக்டரின் நம்பகமான மருந்தைப் போல பல மருந்துகளின் கலவையே அனாஸின். ஆகையால்தான் லட்சக்கணக்கானவர்கள் அனாஸின் சாப்பிடுகிறார்கள்; சிபாரிசும் செய்கிறார்கள்.

*ஜலதோஷம் மற்றும் ஃப்ளூவினால் ஏற்படும் வலிகள், தலைவலி, முதுகுவலி, தசைவலி, பல்வலி ஆகியவற்றுக்கு அனாஸின் சக்திவாய்ந்த நிவாரணி.*



சக்தி வாய்ந்த, நம்பகமான அனாஸின்

## இந்தியாவின் புகழ் பெற்ற வலி–நிவாரணி

Regd, User of TM: Geoffrey Manners & Co., Ltd.

A/2/5-76

அவர்களில் சிலர் மட்டுமே பய பக்தி யோடு இருந்தார்கள்.

முன் மண்டபத்தில் தவம் செய்யும் பாவனையில் அமர்ந்திருந்த ஸ்ரீவல்ல பரைக் கண்டதும், ஒருவன், ''இங்கே யும் ஒரு வைஷ்ணவ சந்நியாசியா? இந் தப் பெரிய மன்னர் படுத்திய பாடு எங்கு பார்த்தாலும் வைஷ்ணவ சந்நி யாசிகள்!'' என்றான்.

''ஏ, சந்நியாசி! மன்னவர்தான் திருவரங்கத்துக்குப் போய் விட்டாரே, நீயும் போக வேண்டியதுதானே? ஏன் இந்தக் கிருஷ்ணன் கோவிலில் அடைக் கலம் புகுந்திருக்கிறாய்?'' என்றான் ஒருவன்.

''காட்டில்தானே அப்பா இருக் கிறேன், இதில் உனக்கு என்ன கஷ்டம்?'' என்றார் ஸ்ரீவல்லபர்.

''நீங்கள் காட்டைக் கூடக் கெடுத்து விடுவீர்கள். உங்களை நம்பக் கூடாது!'' என்றான் ஒருவன்.

''நல்லது. உங்களுக்கு என்ன வேண் டும்?'' என்று சிரித்துக் கொண்டே கேட் டார் ஸ்ரீவல்லபர்.

''உண்ண உணவு வேண்டும். உறங்க இடம் வேண்டும். கொடுக்க மறுத்தால் உங்கள் உயிர் வேண்டும்!'' என்றான் அவன்.

''எது வேண்டுமானாலும் கிடைக் கும். முதலில் சிரம பரிகாரம் செய்து கொள்ளுங்கள்'' என்றார் ஸ்ரீவல்லபர்.

சிப்பாய்கள் அனைவரும் மேலாடை களைக் கழற்றிவிட்டுக் கோவிலின் வெளிப் புறத்தில் வந்து அமர்ந்தார்கள்.

அங்கிருந்தபடியே, ஒருவன், ''ஏ, சந்நியாசி! உணவு தயாரானதும் கூப் பிடு!'' என்று சத்தம் போட்டான்.

ஸ்ரீவல்லபர் பதில் பேசவில்லை. அதற் குப் பதிலாகக் கிருஷ்ணன் நம்பூதிரி ஓடோடி வெளியே வந்தான்.

வந்திருப்பவர்கள் வஞ்சி மாவேந் தரின் படைகள் அல்லவா! அதற்குரிய மரியாதையோடு அவர்களை வரவேற்க வேண்டாமா?

தலையில் உருமால் கட்டிக் கொண்டு, இடையில் ஒரு பட்டுக் கச்சத்தோடு ஓடி வந்து, ''ஐயா, உணவு தயாரா யிருக்கிறது'' என்றான் கிருஷ்ணன் நம் பூதிரி.

''என்ன, அதற்குள்ளாகவா?'' என்று கேட்டான் ஒரு வீரன்.

''சுவாமிகளுக்குத் தயார் செய்தது. அதை நீங்கள் சாப்பிடுங்கள். அடுத்து அவர்களுக்குச் சமையல் செய்கிறேன்'' என்றான் கிருஷ்ணன் நம்பூதிரி.

அவனை மேலும் கீழுமாகப் பார்த்த ஒரு வீரன், ''என்ன இடையிலே பட் டுக் கச்சம்! தலையிலே வல்லவட்டு! ஒரே ராஜ மரியாதையாக இருக்கிறதே!'' என்று கேலி செய்தான்.

''தங்களைப் போன்ற பெரிய இடத்து மனிதர்களை இப்படி வரவேற்க வேண்டு மென்பது கோவில் விதி. அதனால் தான்...'' என்று இழுத்தான் கிருஷ் ணன் நம்பூதிரி.

''நல்லது. இவ்வளவு பேருக்கும் உணவு இருக்குமா?'' என்று கேட்டான் ஒரு வீரன்.

''பத்துப் பேருக்குச் சமையல் செய் திருக்கிறேன். அதைப் பகிர்ந்துகொள் ளலாம். பழ வகைகளும் நிறைய இருக்கின்றன'' என்றான் கிருஷ்ணன் நம்பூதிரி.

''இது கோவில்; அருந்துவதற்கு வெறும் தண்ணீர்தான் இருக்கும்'' என்றபடி எல்லா வீரர்களும் எழுந்து பாட்டுப் பாடிக் கொண்டே உள்ளே நுழைந்தார்கள்.

ஸ்ரீவல்லபரைப் பார்த்துக் கேலி யாகச் சிரித்தபடி உணவருந்தும் இடத் துக்குச் சென்றார்கள்.

அங்கே முன்கூட்டியே இலை போட்டு வைத்திருந்தான் கிருஷ்ணன் நம்பூதிரி.

அனைவரும் வரிசையாக அமர்ந்து அத்தனை உணவையும், பழ வகைகளை யும் தீர்த்து முடித்தார்கள்.

உணவு முடிந்து கை கழுவிக் கோவி லின் பின் பக்கத்தைப் பார்ப்பதற்குப் பின் பக்கமாகவே வெளியேறினார்கள்.

அங்கே குதிரைகள் சில ஏற்கனவே கட்டப்பட்டிருப்பது அவர்கள் கண்ணில் பட்டது.

அவர்களைப் பார்த்ததும் அந்தக் குதி ரைகள் கனைத்தன.

பழக்கப்பட்ட குதிரைகள் — பக்கத் தில் சென்று பார்த்தார்கள் அனைவரும்.

''இது ராஜவர்மன் குதிரை யல்லவா?'' என்றான் ஒருவன்.

''இது கேசவன் குதிரையல்லவா?'' என்றான், மற்றொருவன்.

தங்களைச் சேர்ந்த படைவீரர்களின் குதிரைகள் அவை என்பதைக் கண்டு கொண்டு விட்டார்கள், அவர்கள்.

அகஸ்தீகவரம் காட்டுக்குப் போன குதிரைகள் இங்கே எப்படி வந்தன? அதிலும் பல குதிரைகளைக் காணோமே? அந்தக் காட்டுக்குச் சென்றவர்கள் இரண்டு மூன்று அணியாகப் பிரிந்து விட்டார்களா? அப்படி யென்றால் வந்த வர்கள் இங்கேதானே இருக்க வேண்டும்?

---

''எவ்வளவோ நான் தடுத்தும் கேக்கலே... கைதி 'வீக்'கா இருக் கான்னு வைட்டமின் பி கொடுத்துக்கிட்டே இருந்தாங்க..!'' —தோ





''நேற்று சிகரெட் பிடிக்கறச்சே, ஞாபகமில்லாமல் அதைப் பென்சில்னு நினைச்சுக் காதிலே வைச்சுக்கிட்டேன்.''

—தோ

அவர்கள் சுற்று முற்றும் தேடிப் பார்த்தார்கள். யாரையும் காணவில்லை.

பின்பு கோவிலுக்குள் நுழைந்தார்கள்.

அங்கே துடிக்கும் மனத்தோடு அமர்ந்திருந்தார்கள், ஸ்ரீவல்லபரும், சீடர்களும்.

கையைக் கட்டிக் கொண்டு நின்றான் கிருஷ்ணன் நம்பூதிரி.

''ஏ, சந்நியாசி! இங்கே கட்டப்பட்டிருக்கும் குதிரைகள் யாருடையவை?'' என்று கேட்டான் ஒருவன்.

''எனக்குத் தெரியாது அப்பா!'' என்று அமைதியாகப் பதில் சொன்னார் ஸ்ரீ வல்லபர்.

''ஏ, நம்பூதிரி, நீ சொல்'' என்றான் இன்னொருவன்.

''யாரோ வந்தார்கள்; சாப்பிட்டு விட்டுப் போய் விட்டார்கள்'' என்றான் கிருஷ்ணன் நம்பூதிரி.

''இரவு நேரத்தில் காட்டிலே எங்கே போவார்கள் ? பொய் சொல்லாதே !'' என்றான் ஒரு வீரன்.

''இதில் ஏதோ சூழ்ச்சி இருக்கிறது'' என்றான், மற்றொரு வீரன்.

''சாதாரணமாக இவர்கள் சொல்ல மாட்டார்கள். சாட்டையடி தான் பலன் தரும்'' என்றான் இன்னொருவன்.

கிருஷ்ணன் நம்பூதிரியையும், ஸ்ரீவல்லபரையும், சீடரையும் சில வீரர்கள் தூணோடு சேர்த்துக் கயிற்றால் கட்டினார்கள்.

மற்றும் சிலர் அகல் விளக்குகளைத் தூக்கிக் கொண்டு கோவில் முழுதும் தேடினார்கள்.

அவர்களிலே ஒருவன் கண்ணில் தனி மண்டபம் பூட்டப்பட்டிருப்பது தெரிந்தது.

முதலில் அவன் அதை ஏதோ ஒரு தானியக் கிடங்கு என்றுதான் கருதினான்.

ஆனால், அதையும் திறந்து பார்க்க வேண்டும் போல் இன்னொரு வீரனுக்குத் தோன்றிற்று.

அவன் நேரே கிருஷ்ணன் நம்பூதிரியிடம் வந்து, ''ஏய், அந்த மண்டபத்துச் சாவியைக் கொடு'' என்றான்.

''அதில் ஒன்றுமில்லை. அது வெறும் உக்கிராண அறை. தானியங்களும், பழ வகைகளுமே இருக்கின்றன'' என்றான், கிருஷ்ணன் நம்பூதிரி.

''அதைத்தான் பார்க்க விரும்புகிறேன். கொடு சாவியை '' என்றான், அவன்.

கிருஷ்ணன் நம்பூதிரி கொடுக்க மறுத்தான்.

அவன் இடுப்பைத் தடவி, ஆடைக்குள் செருகியிருந்த சாவியைப் பறித்துக் கொண்ட வீரன், மற்றும் சில வீரர்களோடு சென்று அந்த மண்டபத்துப் பூட்டைத் திறந்தான்.

திறந்த உடனேயே பளிச்சென்று கதவைத் திறந்து கொண்டு வெளியே வந்தான் மார்த்தாண்டவர்மன். அவனும் தலையில் உருமால் கட்டியிருந்தான்.

அவர்கள் உள்ளே நுழைந்து மெல்லிளங்கோதையையும், கல்யாணியையும் பார்த்துவிடக் கூடாதே என்ற பயம் அவனுக்கு.

மார்த்தாண்டவர்மனைப் பார்த்ததும் எல்லா வீரர்களும், 'ஓ'வென்று கத்தினார்கள்.

''இளவரசர் பிடிப்பட்டுவிட்டார் '' என்று கூச்சலிட்டார்கள்.

ஸ்ரீவல்லபரின் பக்கத்தில் நின்ற வீரர்களும் அங்கே ஓடி வந்தார்கள்.

''இளவரசருக்கு வணக்கம் ! மன்னவர் மூன்றாம் சேரமான் என்ற பாஸ்கர ரவிவர்மரின் ஆணைப்படி நீங்கள் கைது செய்யப்படுகிறீர்கள்'' என்று, மார்த்தாண்டவர்மனை நெருங்கினான் அந்தப் படைக் கூட்டத்தின் தலைவன்.

இமை மூடித் திறக்கும் முன்பே அவன் இடையில் இருந்த வாளை உருவிக் கொண்டான் மார்த்தாண்டவர்மன்.

அந்த ஐம்பது பேரோடும் தனியொருவனாக நின்று போரிட்டான். எவ்வளவு நேரம் அது சாத்தியமாகும் ?

ஆயினும் அவன் சிறைப்பட விரும்பவில்லை.

இரண்டு வீரர்களை வெட்டிக் குவித்தான்.

ஒரு வீரன் ஆத்திரம் தாங்காமல் அவன் மார்பில் ஈட்டியால் ஓங்கிக் குத்தினான்.

அவனை அப்படியே தூக்கிக் கொண்டு வெற்றி பெற்றுவிட்ட களிப்பில் மற்ற அனைத்தையும் மறந்து குதிரையின் மீது போட்டுக் கொண்டு படை வீரர்கள் பறந்தார்கள்.

அவர்கள் சென்றதும் கதவைத் திறந்து கொண்டு ஓடி வந்தார்கள், மெல்லிளங்கோதையும், கல்யாணியும்.

''சுவாமி !'' என்று கதறியபடி மூர்ச்சித்து விழுந்தாள், கல்யாணி.

ஆம்; கல்யாணி ! (தொடரும்)

## சங்கீத ஆசிரியர்கள் கல்லூரி

**மியூஸிக் அகாடமி, சென்னை**

**115 - E, மோபரேஸ் ரோடு,**
**ராயப்பேட்டை, சென்னை - 600 014**

**1978 ஜூலை 1ம் தேதி**
**கல்லூரி திறக்கப்படுகிறது**

பள்ளிகளில் சங்கீத ஆசிரியர்களாகப் பணிபுரிய கல்வித்துறை இயக்குநரால் அங்கீகாரம் பெற்றது

பிரின்ஸிபால் :
**வித்வான் ஸ்ரீ K. C. தியாகராஜன்**

சங்கீத சாஸ்திர (தியரி) வகுப்பு, சங்கீத போதனை முறை ஆகியவற்றைத் தேர்ந்த விசேஷ ஆசிரியர்களிடம் பயிற்சி பெறலாம். உபகாரச் சம்பளம், சம்பளச் சலுகை வசதிகளும் உண்டு

---

சர்க்கார் லோயர், ஹையர் வகுப்பு சங்கீதப் பரீட்சைகளுக்கு பயிற்சி அளிக்கப்படும் மாணவர்களுக்கு மாடல் ஸ்கூல் இணைக்கப்பட்டுள்ளது
பிராஸ்பெக்டஸுக்கும் விண்ணப்ப பாரங்களுக்கும் கரெஸ்பாண்டெண்டுக்கு மனுச்செய்து கொள்ளவும்

---

**வீணை வகுப்பு :** *(மாலையில்)*
தேவகோட்டை **ஸ்ரீ நாராயண அய்யங்கார்** அவர்களால் பயிற்சி அளிக்கப்படும்

மாதக் கட்டணம் : ஸீனியர் வகுப்புக்கு ரூ. 40/-
ஜூனியர் வகுப்புக்கு ரூ. 20/-

---

## பாலசரஸ்வதி சாஸ்திரீய பரதநாட்டியப் பள்ளி

**(மியூஸிக் அகாடமி, சென்னை)**

115-E, மோபரேஸ் ரோடு,
ராயப்பேட்டை, சென்னை - 600 014

*

புத்தாண்டுக்கான வகுப்புகள் இப்பொழுது ஆரம்பிக்கப்பட்டுள்ளன. பள்ளியில் சேருவதற்கான விண்ணப்பங்கள் வரவேற்கப்படுகின்றன.

மாதக் கட்டணம் :

| | |
|---|---|
| முதல் ஆண்டு | ரூ. 20/- |
| இரண்டாவது ஆண்டு | ரூ. 30/- |
| மூன்றாவது ஆண்டும் அதற்குப் பிறகும் | ரூ. 45/- |

---

ஸ்ரீ சாந்து கம்பெனியின்

ஏந்திழையாருக்கு ஏற்ற பொட்டை தேர்ந்தெடுக்கும்

# போட்டி

சுலபமானது....பரபரப்பூட்டுவது!

## அமோகமான பரிசுகள்

## முதல் பரிசு:
## ப்ரிட்ஜ் அல்லது

வெற்றி பெறுபவர்
தானே தேர்ந்தெடுத்திடும்
**ரூ. 5,000**
மதிப்புள்ள எந்த ஒரு பொருளும்

## மற்ற பரிசுகள்:

Domestic grinder அல்லது
தையல் மெஷின்கள், ஸ்டீல் கப்போர்டுகள், குக்கர்கள், அலாரம் கடிகாரங்கள், பேனா செட்டுகள் முதலியவை,

மொத்தம் ரூ. 45,000/-
மதிப்புள்ள 1001 பரிசுகள்
நுழைவுத் தாள் மற்றும்

இதர விவரங்களுக்கு அருகாமையில் உள்ள ஸ்ரீ குங்குமம் விற்பனையாளரை அணுகிடுங்கள்.







**ஸ்ரீ காஸ்மெடிக்ஸ்,**
தானே, பம்பாய் 400070

**Join today in Shree's Match-The-Bindi contest**

SARATH

# பொன்னியின் புதல்வர்

சுந்தா

## 37. இறுதி வருடம்

**இறுதிநாள் வரை இயக்கச் செறிவு**
**உறுதி தளரா உளத்தின் நிறைவு**

பாரதியார் பாப்பா பாட்டில் உள்ள,

''தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற
— எங்கள்
தாயென்று கும்பிடடி பாப்பா''

என்ற வரியை, தமது பத்திரிகையின் முத்திரை வாக்கியமாகக் கல்கி தேர்ந்தெடுத்த போது, அதிலிருந்து ஒரு சொல்லை உதிர்த்து, இப்படி மாற்றி அமைத்தார் :

தமிழ்த் திருநாடு தன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா !

இந்த மாற்றத்தால் உண்டான தனிப் பொருள், 1954 தொடக்கத்தில், சென்னை மாகாணப் பிரிவினையின் பலனாய், ஒரு தனித் திருநாடாகத் தமிழ் நாடு பரிணமித்தபோது, ஒரு தனிச் சிறப்பை அடைந்தது. அந்தச் சிறப்பு நிலையை உணர்ச்சிப் பெருக்குடன் தமது புத்தாண்டு இதழில் கல்கி வரவேற்றார் :

சுதந்திர பாரத நாட்டுக்குள் தமிழ் நாடு தனி ராஜ்யமாக உருவெடுத்திருக்கிறது.

1954ம் ஆண்டின் ஆரம்பத்தில் புத்துயிர் பெற்ற புதிய தமிழ் நாட்டைக் குதூகலத்துடன் வரவேற்கிறோம்.

தனி அரசு பெற்ற புதிய தமிழ் நாட்டு மக்களுக்கு வாழ்த்துக் கூறுகிறோம்.

ஒளி படைத்த கண்ணும் உறுதி கொண்ட நெஞ்சும் உள்ளவர்கள், எளிமை கண்டு இரங்குகிறவர்கள், சிறுமை கண்டு பொங்குகிறவர்கள், பழந் தமிழ் நாட்டின் பெருமையை நினைந்தவர்கள், இடைக் காலத்தில் நேர்ந்த இழிதகைமைகளை மறந்தவர்கள், பார்த்தனையும் மாமல்லனையும் நிகர்த்தவர்கள், வள்ளுவரையும் கம்பரையும் போற்றுகிறவர்கள், பாடிய வாய் தேனூறும் பாரதி பாடல்களைப் பாடிக் கொண்டு காந்தி மகான் வகுத்த பாதையில் நடப்பவர்கள் — இத்தகைய தமிழர்கள் புதிய தமிழ் நாட்டில் பல்கிப் பெருக வேண்டும் என்று விரும்புகிறோம்.

''புதிய தமிழ் நாட்டினுய் வா வா வா !'' என்ற அழைப்புக் கூவலுடன் தொடங்கிய இந்தத் தலையங்கத்தில், ''புதிய தமிழ் நாட்டில் வாழக் கொடுத்து வைத்திருப்போர் பாக்கியசாலிகள்'' என்றார் கல்கி. ஆனால் முழுதாக ஓராண்டுகூடப் புதிய தமிழ் நாட்டில் அவர் வாழக் கொடுத்து வைக்கவில்லை. ஆயினும், அந்த ஆண்டின் கடைசி மாதத்தில் அவர் பிரிந்ததுவரை அவருடைய வாழ்க்கை தமிழ் நாட்டின் வாழ்க்கையுடன் இணைந்தும் கலந்தும் இருந்தது. கடைசி மூச்சு வரை பத்திரிகாசிரியராயும் எழுத்தாளராயும் அவர் செயல்பட்டுக் கொண்டிருந்தார். நடமாட முடிந்த வரை, சென்னையிலும் வெளியூர்களிலும் பொது நிகழ்ச்சிகளில் பங்கு கொண்டார்.

அந்தக் கடைசி ஆண்டு நிகழ்ச்சிகளிலும் சுக துக்க அனுபவங்களிலும் சிலவற்றை முன்பே கவனித்தோம். அவை போக மற்றவைகளில், முக்கியமான அல்லது சுவையான சிலவற்றை இப்போது பார்ப்போம் — நாட்குறிப்பு வடிவில் :

**முதல் ஆசிரியருக்கு மண்டபம்**

(பிப்ரவரி 5) இராயப் பேட்டையில் திரு வி. க.









அன்பர்களின் பெரு கூட்டம் - ஐந்து மாதங்களுக்கு முன் 'அன்பிலும் சிவத்திலும் இரண்டறக் கலந்து விட்ட' கல்யாண சுந்தரனாருக்கு மண்டபம் எழுப்புவதற்காகக் கால்கோள் விழா — பி. டி. ராஜனின் தலைமை.

தமது முதல் பத்திரிகாசிரியருக்கு நினைவுச் சின்னம் நிறுவும் முயற்சியில் ஆர்வத்துடன் கல்கி ஈடுபட்டு, கணிசமாய் நிதி திரட்டிக் கொடுத்திருந்தார்; அன்னாரின் ஆருயிர் நண்பர் சச்சிதானந்தம் பிள்ளைக்குத் துணையாக, மணி மண்டப அமைப்புக் குழுவிலும் செயலாற்றிக் கொண்டிருந்தார்.

அடிக்கல் நாட்டிய ராஜாஜி திரு வி. க.வுடன் தம்மையும், தம்முடன் கல்கியையும் இணைத்து மனம் விட்டுப் பேசினார்:

கல்கியின் எழுத்து ''நவசக்தி''யில் ஆரம்பமாயிற்று. திரு. வி. க. அவருக்கு எழுத ஆதரவும் ஊக்கமும் அளித்தார். கல்கியின் சாமர்த்தியத்தையும் புத்திசாலித்தனத்தையும் திரு வி. க. என்னிடம் புகழ்ந்து சொல்வதுண்டு....

'' எழுத்தாளர்கள் இவ்வளவு பேர் இருக்கிறார்களே, கல்கியிடம் மட்டும் இந்த ராஜாஜி ஏன் ஓரவஞ்சனையாக நடந்து கொள்கிறார்?'' என்று பலருக்கு மனத்தில் ஒரு சந்தேகம் இருக்கிறது. அப்படி இல்லை. அவரிடம் திறமை இருக்கிறதை உணர வேண்டும். திறமை இல்லாது போனாலும் என் அன்பு செல்லாது. இது பயனற்ற வாழ்க்கை என்பது நமக்கெல்லாம் தெரிந்தது. இதில் திறமை இல்லாது போனால் என்ன பிரயோஜனம்?....

திரு வி. க.வின் நடையில் ஒரு விசேஷம், அந்த நடை கோயில் போன்றது. தமிழ் நூல்களின் நடையை அப்படியே வைத்திருப்பதில் அவருக்கு ஆசை.

கல்கி ஒரு புதிய நடையை ஆரம்பித்தார். சாதாரணமாக மக்கள் பேசுகிற நடையில் அவர் எழுதுகிறார். போகிற போக்கிலே பேசிக் கொண்டு போகிற மாதிரி, திரும்பிப் பார்க்காமல் எழுதும் நடை அது.

(சுதேசமித்திரன், தினமணி 6-2-54)



விழாவின் இறுதியில் கல்கியின் நன்றியுரை. அதில் அவர் ''திரும்பிப் பார்க்காமல் எழுதும் நடை'' என்று ராஜாஜி சொன்னதைக் குறிப்பிடவில்லைதான். ஆயினும் அதைச் சுற்றி அவருடைய சிந்தனை சுழன்றிருக்கும்.

திரும்பிப் பார்க்காமல் நடை போட்டது அவருடைய பேனா மட்டும் அல்ல; அவருடைய வாழ்க்கைச் சக்கரமும் அப்படித்தான். முன்னேறிக்





○ திரு வி. க. மணிமண்டபம் அடிக்கல் நாட்டு விழாவின்போது. ○ ''என்றும் இருப்பார் இதயத்தில் ஒளிப்பார்'' — டி. கே. சி. ○ ஔவையார் படத் தயாரிப்புக்கு உதவிய கொத்தமங்கலம் சுப்புவுக்குப் பாராட்டு விழா நடத்தக் கல்கி காரணமாய் இருந்தார். ○ ''யார் இந்த வாசன்?'' என்று கேட்டுக் கல்கி பேச்சைத் தொடங்கினார். மேடையில் இடமிருந்து வலமாக வாசன், டி. பி., ராஜாஜி, திருப்புகழ் மணி. ○ சின்னம்மாபுரத்துக்குத் தூரன், பகீரதன் முதலியோருடன் கல்கி விஜயம் செய்தார். ○ பொய்மான் கரடு, ''பொன் வயல்'' என்ற தலைப்பில் திரைப்படமாயிற்று. ஜெயந்தி புரொடக்ஷன்ஸ் அமைப்பாளர்கள் திருவாளர்கள் ஏ. டி. கிருஷ்ணசாமி, சாரங்கபாணி, டி.ஆர். ராமச்சந்திரன் முதலானோரைக் கல்கியுடன் படத்தில் காணலாம்.

**டேப் இல்லாது அளக்கலாம் :**

**நாடா இல்லாமலேயே அளவுஎடுக்கும் 'டேப்' இது. இதை அளவு எடுக்கவேண்டிய மேஜை, துணி, அல்லது சுவர்மீது தேய்த்துக் கொண்டே போனுல் அளவை டிஜிட்டல் முறையில் காண் பிக்கும்.**

'ட்ரு' — பாபு




கொண்டிருந்த வேகத்தில் பின்னே திரும்பிப் பார்க்க நேரம் இல்லே.

மணி மண்டபம் அமையப் போகிற அதே வட்டாரத்துக்கு, முப்பது ஆண்டு களுக்கு முன்னுல், யாரோ ஓர் இளைஞ ராக, பேனு ஒன்றையே துணையாகக் கொண்டு வந்தார் அவர் ; அந்தத் துணையை நம்பலாமா என்ற சந் தேகத்துடன் வந்தார். ''தமிழுக்கும் தமிழ் எழுத்தாளர் குலத்துக்கும் தந்தை யாக'' விளங்கிய கல்யாண சுந்தரனு ரின் அன்பினுலும் ஆதரவினுலும் அந்தச் சந்தேகம் நீங்கிற்று. நவசக்தியின்மூலம் தமது பேனுவின் சக்தியை அவர் உணர்ந்து, அதையே தொழிற் கருவி யாகவும் வாழ்க்கைச் சாதனமாகவும் கொள்ளத் துணிந்தார்.

பேனுவும் கையுமாய், வேகமாக, வெகு வேகமாக அவர் முன்னேறினுர் ; அந்த வேகத்தைக் கண்டு எல்லாரும் வியந்தார்கள். அவரே வியந்தார்.

விழாவுக்குப் புறப்படுவதற்குச் சிறிது நேரத்துக்கு முன்னுல்தான், மாபெரும் ''பொன்னியின் செல்வன்'' தொடரில், கடைசி அத்தியாயங்களில் ஒன்றை எழுதி அச்சுக்கு அனுப்பிவிட்டு வந் திருந்தார். அந்த நாவல் முடிந்ததும் இன்னும் ஒன்றைத் தொடங்க வேண் டும்; அதையும் அடுத்து மேலும் மேலும் எழுத வேண்டும். முன்னே பார்க்க வேண்டுமே தவிர பின்னே திரும்பிப் பார்க்கக் கூடாது.

அவர் திரும்பிப் பார்க்கவில்லேதான். பார்த்திருந்தால், இருள் உருவம் ஒன்று அவரை எட்டிப் பிடிக்க விரைந்து கொண்டிருந்ததைக் கண்டிருப்பார்.

**தியாகி ஒருவருக்கு அஞ்சலி**

(பிப்ரவரி 12) கல்கியின் தலைமையில் கோவையில் ஒரு பெரிய விழா; கோவை மாவட்டப் பஞ்சாலைத் தொழிலாளர் சங்கத்தை நிறுவியவரும், சோஷலிஸ வாதியும், 1942ஆம் ஆண்டு விடுதலைப் போராட்டத்தில் உயிர் நீத்தவருமான என். ஜி. ராமசாமியின் நினைவைப் போற்றுவதற்கான விழா.

தமது உரையில் கல்கி சொன்னுர் :

ஸ்ரீ என். ஜி. ராமசாமி அவர்களின் அமர தின விழாவில் கலந்துகொள்ள நான் ரயிலில் வந்து கொண்டிருக்கையில் எனக்குத் தூக்கமே வரவில்லே. அவரும் நானும் திருச்சி சிறையில் இருந்த காலம் நினைவுக்கு வந்தது. அப்போது என்னுடன் இருநூறு பேர்களுக்கு மேல் இருந் தனர். அவர்களில் பலரை மறந்து விட்டேன். ஆனுல் தோழர் என். ஜி. ஆர். அவர்களை மட்டும் மறக்க முடியவில்லே. கையில் தடி யைப் பிடித்துக் கொண்டு காலே உந்தி உந்தி நடப்பார். அவர் முகம் எப்போதும் மலர்ந்து இருக்கும். யாருடனுவது பேசும்போது முகத் தில் புன்முறுவல் தவழ வெகு இனிமையாகப் பேசுவார். முதலாளிகளைப் பற்றிப் பேச ஆரம்பித்து விட்டாலோ அவர் கண்கள் சிவந்துவிடும். வார்த்தைகளில் கனல் பொறி பறக்கும்.

தொழிலாளர்களுக்கு அவர் பாடுபட்ட தால் அவரைச் சிலர் தாக்கிக் காலே உடைத்துவிட்டனர் என்பதை அறிந்த போது அவர் எனக்கு மிகப் பெரியவராகக் காட்சி அளித்தார். ''அடடா, இப்படிப் பட்ட உத்தமர், தன்னலம் பாராத தியாகி ஒருவர் தமிழ் நாட்டில் இருக்கிறுரே'' என்று பெருமிதம் அடைந்தேன்....

நான் படுத்திருந்த ரயில் ஓடிக் கொண் டிருந்தது. என் சிந்தனேயும் சுழன்று கொண் டிருந்தது. ரயில் சக்கரங்களும் வேகமாய்ச் சுழன்றன. என் உள்ளம் ''என்.ஜி.ஆர். எங்கே ?'' என்று திரும்பத் திரும்பக் கேட்டுக் கொண்டிருந்தது.

(ஆதாரம் — பிரிதன் கட்டுரை கல்கி இதழ் 21-2-54)

**வெள்ளித்திரையில் பொய்மான்**

((அதே தேதி) ''பொன் வயல்'' திரைப்படத்தின் வெளியீடு — கல்கியின் ''பொய்மான் கரடு'' குறுநாவலின் சினிமா வடிவம் அது. ஏ. டி. கிருஷ்ண சாமி வசனம் எழுதி இயக்கிய அப்படத் தில், அஞ்சலி தேவி, மைனுவதி, முத்து லட்சுமி, டி. ஆர். ராமச்சந்திரன், கே. சாரங்கபாணி முதலானேர் நடித் தார்கள். வாஹினி ஸ்டுடியோவில் எடுத்த அப்படத்தை, தொடக்கவிழா முதல் இறுதி வடிவம் வரை, வெவ் வேறு கட்டங்களில் கல்கி பார்த்தார். ஆனுல், ''தியாகபூமி'' படத்தைப் பற்றி முன்கூட்டியே அவர் அறிவிப்பும் விமரிசனமும் செய்தது போல், இதைப் பற்றிச் செய்யவில்லே ; பின்னரும்

# பழரசம் பருகுங்கள்

## ஸ்பென்ஸர்ஸ்

## பழரசங்கள் மற்றும் ஸிரப்புகள்

உங்கள் விருந்தினருக்குப் புதுமை யான விருந்து படையுங்கள். ஸ்பென்ஸர்ஸ் பழரசங்களையும் ஸிரப்களையும் பருகக் கொடுங்கள். அவர்கள் மட்டுமின்றி உங்கள் குடும்பத்தினரும் விரும்பிப் பருகுவார்கள். ஏனெனில் இவை புதுச்சுவை குன்றாத,

தெவிட்டாத பானங்கள். சிக்கனமானவையும் கூட. வாயு கலந்த குளிர்பானங்களைக் காட்டிலும் மொத்தத்தில் விலை மலிவானவை. ஸ்பென்ஸர் தயாரிப்பு என்றால் தரத்தின் சிறப்பைப் பற்றிச் சொல்ல வேண்டாமல்லவா?




தரமுயர்ந்த
பானங்களைத்
தருவோர்

**ஸ்பென்ஸர்ஸ்**

ஸ்பென்ஸர் & கோ. லிட்., சென்னை மற்றும் கிளைகள்

செய்யவில்லை. மற்றப் பத்திரிகைகளில், பெரும்பாலும் சாதகமாகவே இதைப் பற்றி மதிப்பீடுகள் வெளிவந்தன.

கல்கியின் இன்னும் ஒரு கதையையும் ஏ. டி. கிருஷ்ணசாமி படமாக்கத் திட்டமிட்டார்; ஆனால் அதை நிறைவேற்றாமல் விட்டுவிட்டார். (அதற்கெனத் தமது சிறுகதைகள் இரண்டை இணைத்து, கல்கி அமைத்த திரைக் கதையை அடிப்படையாய்க் கொண்டதுதான், இப்போது ராஜேந்திரன் எழுதி வரும் ''அரும்பு அம்புகள்''.)

### கருணைப் பணி

(பிப்ரவரி 14) அன்னதான சிவன் சங்கத்தின் தலைவர் என்ற முறையில், கும்பகோணத்துக்கு அருகே அம்மா சத்திரத்தில் முக்கியமான நிகழ்ச்சி ஒன்றில் கல்கி கலந்து கொண்டார்—அனாதைக் குழந்தைகளுக்கான இல்லத்தின் திறப்பு விழா. சிவன் சங்க நிர்வாகிகள், தஞ்சைக் கலெக்டர் பழனியப்பன், ஜில்லா போர்டு விசேஷ அதிகாரி பாஸ்கரத் தொண்டைமான் ஆகியோரின் கூட்டு முயற்சியால் நிறுவப்பட்ட இல்லம் அது.

திறப்புவிழாவில் கல்கியின் உருக்கமான பேச்சு :

சோழ வள நாட்டில் ஒரு காலத்தில் அன்னதானம் பெறுவதற்கு ஆள் கிடைக்காமல் திண்டாட வேண்டியிருந்தது என்பதைச் சிறுத்தொண்டர் கதை எடுத்துக்காட்டுகிறது. சென்ற வருஷம் அன்னதான சிவன் சங்கத்தின் ஆதரவில், கும்பகோணத்தில் பத்தாயிரம் பேர்களுக்கு அன்னம் வழங்கினார்கள். பாக்குப் பட்டைகளில் சாதம் வாங்கிச் சாப்பிட்ட அந்தப் பரிதாபம் நமக்கு எதைக் காட்டுகிறது ? நம் நாட்டில், அதுவும் நெற்களஞ்சியமான தஞ்சையில், அப்படிப்பட்ட காட்சியைக் காணும்போது, நாட்டின் க்ஷீண தசையைத்தான் நாம் அறிந்து கொள்ள முடிகிறது. இந்த மாதிரியான நிலைமை மாற வேண்டும்.

நாட்டின் செல்வங்கள் சிறு குழந்தைகள் தான். அவர்களுடைய நல் வாழ்வில்தான் நாட்டின் வளமான எதிர்காலம் இருக்கிறது. அவர்களை அநாதைகளாய் விடக் கூடாது. இதுபோன்ற மாணவர் இல்லங்களுக்குத் தஞ்சை ஜில்லா மிராசுதார்கள் பூரண ஆதரவு அளிக்க வேண்டும்.

(ஆதாரம்—பரிரதன் கட்டுரை கல்கி இதழ் 28-2-54)

இப்படி ஓர் இல்லம் அமைக்க வேண்டும் என்ற கருத்தை, இரண்டு ஆண்டுகளுக்கு முன்னால், ''அவர் ஓர் அதிசய மனிதர்'' என்ற அன்னதான சிவன் பற்றிய கட்டுரை ஒன்றில் கல்கி வெளியிட்டிருந்தார். அதற்கு நிதி உதவி அளிக்கும்படி விண்ணப்பம் செய்து, தம்மால் இயன்ற அளவு பணம் திரட்டியும் கொடுத்தார்.

### குற்றால முனிவரின் மறைவு

(பிப்ரவரி 16) காலையில் டி. கே. சி. காலமானதாக முற்பகலில் தந்தி—கல்கி குடும்பத்தார், சதாசிவம் குடும்பத்தார், கல்கி அலுவலகத்தார் அனைவருக்கும் பெருந் துக்கம் — கல்கியும் சதாசிவமும் மாலையில் ரயிலேறி மதுரை சென்று அங்கிருந்து காரில் குற்றாலத்துக்கு விரைந்தார்கள் — டி.கே.சி.யின் மனைவியாரிடமும் மற்றும் குடும்பத்தார் நண்பர்களிடமும் துக்கம் விசாரித்து ஆறுதல் சொல்லிவிட்டுத் திரும்பினார்கள்.




**மாயூரத்தில் பஸ் ஸ்டாண்டுக்கு அருகிலுள்ள மாரியம்மன் கோவில் வாசலில் இப்படி ஒரு விளம்பரம் :**

**காலணிகளை வெளியே விட்டுச் செல்லவும். ஜோடி ஒன்றுக்குக் கட்டணம் 0-0-5 பைசா. தினமும் தரிசனத்துக்கு வருகிறவர்களுக்கு மாதம் 0-75 பைசா.**

**- ஜீவி**

சென்னையிலிருந்து புறப்படுவதற்கு முன்னால், 21ம் தேதிய இதழில் ஒரு முழுப் பக்கத்தில் ரசிகமணியின் உருவப் படத்தைப் பதிக்கச் சொல்லியிருந்தார் கல்கி. திரும்பி வந்ததும், அன்னாருக்குத் தக்கபடி அஞ்சலி செலுத்துவதில் முனைந்து, அடுத்த மாதம் ஏழாம் தேதியக் கல்கி வெளியீட்டை டி.கே.சி. நினைவு மலராகக் கொண்டு வரத் தீர்மானித்து, அந்த வேலையில் தாமும் ஈடுபட்டுத் தமது அலுவலகத்தாரையும் முடுக்கி விட்டார். அதற்கான ஏற்பாடுகள் நடந்து கொண்டிருக்கையில், பிப்ரவரி 28ம் தேதிய இதழுக்குத் தலையங்கம் எழுதும் கெடு வந்துவிட்டது. டி. கே. சி.யைப் பற்றி அல்லாமல் வேறு எதைப் பற்றி அப்போது தலையங்கம் எழுதத் தோன்றும் ? எழுதத்தான் முடியும் ?

ரஸிகமணி டி. கே. சிதம்பரநாத முதலியார் அவர்கள் நம்மை விட்டுப் பிரிந்து

போய்விட்டார் என்று கருத முடியவில்லை. அவர் இந்தத் தெய்வத் தமிழ் நாட்டில் என்றும் இருந்து கொண்டிருப்பார்; தமிழன்பர்களின் இதயங்களில் எப்போதும் ஒலித்துக் கொண்டிருப்பார் . . . .

கம்பன் கவிதையின் இணையற்ற இன்பத்தை நாம் அனுபவிக்கும்போதெல்லாம், ரஸிகமணி அவர்களின் உற்சாகம் ததும்பும் பொன்முகம் நம் கண் முன்னே காட்சி அளித்துக் கொண்டிருக்கும்.

பொதிகை மலைச் சாரலிலிருந்து கலழ்ந்து வரும் இனிய தென்றல் காற்றில் அவருடைய கம்பீரமான குரல் ஒலித்துக் கொண்டே இருக்கும் . . . .

தேனருவி திரை எழும்பி வானின் வழி ஒழுகும்போது, 'வானம் அளந்ததனைத்தும் அளந்திடும்' நம் தமிழ் மொழியின் ஆற்றலைப் பற்றி ரஸிகமணி கூறும் தேனினுமினிய சொற்கள் நம் செவிகளில் ஒலித்துக்கொண்டே இருக்கும் . . . .

ரஸிகமணி டி. கே. சி. அவர்கள் தமிழ்க் கவிதைக்குச் செய்த தொண்டு அவருடைய




**சைனாவில் புது முறையில் பரீட்சை நடக்கிறது. பரீட்சைக்கு ஒரு வாரம் முன்பு கேள்வித் தாள்களை மாணவர்களுக்குக் கொடுத்து விடுகிறார்கள்.** — ஜீவி

ஆதாரம்: ரேடியோ செய்தி.

பரிபூரண வாழ்க்கையில் ஒரு பகுதியேயாகும். ஆம்; அவருடைய வாழ்க்கை, முழுதும் மலர்ந்து திகழ்ந்த பரிபூரண வாழ்க்கை.

ரஸிகமணி டி. கே. சி. பரிபூரண மனிதர்; பரிபூரணத் தமிழர்; பரிபூரணக் கலைஞர்; பரிபூரண ரஸிகர்; பரிபூரண சிநேகிதர்; பரிபக்குவம் பெற்ற பரிபூரண ஞானி.

பழந் தமிழரின் உயர்ந்த பண்பாட்டுக்கு ஒரு பரிபூரண வடிவம் தர முடியுமானால், அந்த உருவம் ரஸிகமணியின் தோற்றமாகத்தான் அமையும்.

அத்தகைய மகான் நம்மைவிட்டு எப்படிப் போயிருப்பார்? தமிழையும் தமிழ்க் கவிதையையும் தமிழன்பர் குழாத்தையும் விட்டு நம் ரஸிகமணி டி. கே. சி. எப்படிப் போயிருப்பார்? என்றும் அவர், நம்மிடையே அமரராக, சிரஞ்சீவியாக வாழ்ந்து கொண்டுதான் இருப்பார். என்றென்றும் அவருடைய தமிழ்க் குரல் தமிழ் மக்களின் இதயங்களில் ஒலித்துக் கொண்டுதான் இருக்கும்.

இந்த அஞ்சலி உரைக்குக் கல்கி கொடுத்த தலைப்பு:

''என்றும் இருப்பார்! இதயத்தில் ஒலிப்பார்!''

**பாட்டுக்கும் படத்துக்கும் பாராட்டு**

(மார்ச்சு 5) கொத்தமங்கலம் சுப்புவுக்குப் பாராட்டு விழா — முதன் மந்திரி ராஜாஜியின் முன்னிலையிலும், விவசாய மந்திரி பக்தவத்ஸலத்தின் தலைமையிலும் நடைபெற்ற அவ்விழாவில் கல்கி பேசுகையில், சுப்புவின் காந்தி மகான் கதையின் சிறப்பையும், அவரே அதை நெடுகிலும் பாடிக் காந்தீயத்தைப் பரப்பும் பணியையும் புகழ்ந்துரைத்தார்; ஜெமினியின் ஔவையார் படத்துக்குச் சுப்பு வசனமும் பாடல்களும் எழுதி நேர்த்தியாய் அதை இயக்கியதையும் அவர் பாராட்டிப் பேசினார்.

அந்த விழா ஏற்பாடாவதற்குக் கல்கியே காரணமாய் இருந்தார்.

அதற்குச் சிறிது காலத்துக்கு முன்னால், மகோன்னதமான ஔவையார் திரைப்படத்தைத் தயாரித்து அளித்ததற்காக, எஸ். எஸ். வாசனுக்கு, ஒரு பெரிய பாராட்டு விழா, ஸி.பி. ராமஸ்வாமி அய்யரின் தலைமையில் நடைபெற்றது. அவ்விழாவில், கல்கியும் வாசனும், பரஸ்பரம் அன்புடனும் பெருமையுடனும் குறிப்பிட்டுப் பேசிய விவரத்தை, இன்னமும் சிலர் சொல்லிக் கொண்டும் எழுதிக் கொண்டும் இருக்கிறார்கள்.

''யார் இந்த வாசன்?'' என்று கல்கி கேட்டுச் சபையோரைத் திகைக்க வைத்தார். ''இவரை எனக்குத் தெரியாது!'' என்று சொல்லி மேலும் திகைக்க வைத்தார்.

''ஔவையார் படத்தைப் பார்க்கிற வரை, இப்பேர்ப்பட்ட சாமர்த்தியம் உள்ளவர் வாசன் என்பது தெரிந்திருக்கவில்லை. இந்த வாசனைத்தான் எனக்குத் தெரியாது என்றேன்.''

திகைப்பு சிரிப்பொலியில் விடுபட்டு ஓய்ந்த பிறகு கல்கி சொன்னார்:

''அறஞ்செய விரும்பு'', ''ஆறுவது சினம்'' என்பவை போன்ற ஔவையார் வாக்குகளுக்கு ஸ்ரீ வாசன் எடுத்துக்காட்டாய் விளங்குகிறார். சினிமா பார்க்கக் கூடாது என்று ராஜாஜி பிரசாரம் செய்தபோது, ஸ்ரீ வாசனுக்குக் கோபம் வந்தது. பிறகு; ''ஆறுவது சினம்'' என்ற வாக்கின்படியே அவருடைய கோபம் தணிந்தது. ஔவையார் படத்தை எடுத்து, அதை ராஜாஜியே பார்த்து மெச்சும்படி செய்துவிட்டார்.

இதற்குத் தமது நன்றியுரையில் தக்கபடி, ''பதில் மரியாதை'' செய்தார் வாசன்.

இந்த விழாவில் இத்தகைய பாராட்டுக்கள் எனக்குக் கிடைப்பதற்குக் காரணமானவர் யார் என்றால் . . . . இதோ அமர்ந்திருக்கிறாரே

கல்கி கிருஷ்ணமூர்த்தி, இவர்தான்! இவரை நான் சந்தித்திராவிட்டால், என் வாழ்க்கை எங்கோ எப்படியோ சென்றிருக்கும். இந்தப் பெருமைகளை எல்லாம் நான் அடையும்படி, என்னைச் சரியான வழியில் திருப்பியவர் இவர்தான். எனக்குத் தேசிய உணர்ச்சியை ஊட்டி அந்த உணர்ச்சியுடன் என்னைச் செயல்பட வைத்தவரும் இவரே.

### பரோபகாரி படைத்த ஊர்

(மார்ச்சு 21) கல்கியின் தலைமையில், சின்னம்மாபுரம் என்ற ஹரிஜனக் கிராமத்தின் திறப்பு விழா.

அந்தக் கிராமம் தோன்றிய வரலாறு கல்கியின் மனத்தை நெகிழச் செய்திருந்தது. கொங்குநாட்டில், முத்தாயி பாளையத்தைச் சேர்ந்த சிற்றம்பலம் என்பவர். கருணை உள்ளம் கொண்ட அருமை மனைவி சின்னம்மாளை இழந்து, அவள் விட்டுச் சென்ற இரண்டு குழந்தைகளைத் தாயுமானவராய் இருந்து வளர்த்து வந்தார். முந்திய ஆண்டில் பெய்த பெரும் மழையில், பக்கத்துச் சேரியில் ஹரிஜனங்கள் பலர் மண் குடிசைகளை இழந்து தவித்ததைக் கண்ட சிற்றம்பலக் கவுண்டர், தாம் பாடுபட்டுச் சம்பாதித்த பணத்தைக் கொண்டு, மேட்டுப்பாங்கான இடம் ஒன்றில், வசதியான கெட்டிக் கட்டட விடுகள் அடங்கிய கிராமம் ஒன்றை அவர்களுக்கு அமைத்துக் கொடுத்தார்; அந்தக் கிராமத்துக்குத் தமது மனைவியின் நினைவாக, ''சின்னம்மாபுரம்'' என்று பெயரிட்டார். பெரிய செல்வந்தர் அல்லாத ஒருவர், இப்படி ஓர் உபகாரம் ஹரிஜனங்களுக்குச் செய்ததை எண்ணிக் கல்கி வியந்து, அந்தக் கிராமத்தின் திறப்பு விழாவுக்குத் தலைமை வகிக்க ஆவலுடன் சென்றார். அவருடன், சிற்றம்பலத்தின் நெருங்கிய உறவினரான பெரியசாமித் தூரனும், துணையாகவும் நிருபராகவும் பகீரதனும் சென்றிருந்தார்கள்.

அமைச்சர் பழனிச்சாமிக் கவுண்டர் திறப்பு விழாவை நடத்தினார். சின்னம்மாளின் படத்தைத் தூரன் திறந்து வைத்தார்.



''என் முதலாளிக்குக் கோபம் வந்தால் 'முட்டாள், முட்டாள்' என்று திட்டுவார்''

''என்னுடைய எஜமான் ஒரு சந்தேகப் பேர்வழி. 'மூளை இருக்கா?' என்று என்னிடமே கேட்பார்!'' — கன்னிஸா

கல்கியின் தலைமை உரையில், வழக்கம் போலவே நயமான கருத்துக்கள் செறிந்திருந்தன.

பாரி வள்ளல், முன்னோர்கள் வைத்துப் போன முந்நூறு ஊர்களைத்தான் தானமாக வழங்கினான். ஆனால் சிற்றம்பலம் அவர்கள், தாமே சம்பாதித்த பொருளைக் கொண்டு ஓர் ஊரைக் கட்டி ஏழை ஹரிஜனங்களுக்கு வழங்கியிருக்கிறார். இதன் மூலம் இவர், பாரியைவிடச் சிறந்த கொடையாளி ஆகி விட்டார்.

மனைவி இறந்து போனால் அவள் ஞாபகார்த்தமாக இன்னொரு மனைவியை மணந்து கொள்வதுதான் எல்லாரும் செய்யும் காரியம். ஆனால் சிற்றம்பலம் அவர்களோ, தம் மனைவியின் நினைவுச் சின்னமாக, ஒரு கிராமத்தைக் கட்டி ஏழைகளுக்கு அளித்திருக்கிறார்.

(ஆதாரம்—பகீரதன் கட்டுரை கல்கி இதழ் 4-4-54)

### தில்லையிலே பேனாக் கலைஞர்கள்

(ஏப்ரல் 16, 17, 18) அண்ணாமலை நகரில் அகில இந்திய எழுத்தாளர்களின் மூன்றாவது மகாநாடு.

''பி. இ. என்.'' என்ற சர்வதேசப் பேனாச் சங்கத்தின் இந்தியக் கிளையின் ஆதரவில் மூன்று நாள் கூட்டம்.

தலைமை வகித்தவர் — உபராஷ்டிரபதி டாக்டர் ராதாகிருஷ்ணன்.

துவக்கி வைத்தவர் — பிரதம மந்திரி ஜவாஹர்லால் நேரு.

வரவேற்புக் குழுவின் தலைவர் — அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தின் துணை வேந்தர் ஸி. பி. ராமஸ்வாமி அய்யர்.

நாட்டின் வெவ்வேறு பகுதிகளிலிருந்தும் அம்மகாநாட்டில் கலந்து கொண்ட எழுத்தாளர்கள் சுமார் ஐந்நூறு பேர்.

அவர்களில் தமிழ் எழுத்தாளர்கள் ஐம்பது பேர்.

அவர்களுக்குத் தலைமை வகித்தவர் கல்கி.

மகாநாட்டின் ஒரு பகுதியாகத் தமிழ் எழுத்தாளர் கூட்டம் ஒன்று, அந்நகரத்துக் கோகலே மண்டபத்தில் நடைபெற்றது. அதற்கும் கல்கியே தலைமை தாங்கினார்.

அந்தக் கூட்டத்திலும் சரி, பொது மகாநாட்டிலும் சரி, தமிழ்ப் பிரதிநிதிகள், தமிழுக்கும் தமிழ் எழுத்துக்கும் எழுத்தாளர் சனத்துக்கும் பெருமை அளிக்கும் விதத்தில், பேசியும் பழகியும் நடந்து கொண்டார்கள். அதைக் கண்ட மகிழ்ச்சியுடனும் மன நிறைவுடனும் சென்னைக்குத் திரும்பினார் கல்கி.

(தொடரும்)

# உங்களுக்கு ரூ.1.50 மிச்சம்

ஒவ்வொரு முறையும் நீங்கள் வாங்கும்
இரு **க்ளாக்ஸோஸ்-D**®
400 கிராம் பெட்டிகள் மீது.





இக் கூப்பனைக் கத்தரித்தெடுத்து, பூர்த்திசெய்து உங்கள் வியாபாரியிடம் கொண்டு கொடுக்கவும்.

க்ளாக்ஸோஸ்-D. நிமிடங்களில் உங்கள் களைப்பை விரட்டி புத்துணர்ச்சி மயமான தென்பூட்டுவது. 400 கிராம் பெட்டிகள் இரண்டை வாங்கி இன்றே ரூ 1.50 மிச்சம் காண்க.

முந்துங்கள்! 1976 ஜூன் 30 வரை அல்லது சரக்குகள் இருக்கும் வரை தான் இச் சலுகை. விரும்புவோர் பயனபடுத்திக் கொள்ளலாம்.

(கொட்டை எழுத்துகளில் பூர்த்திசெய்க)

வாடிக்கையாளரின் பெயர் ..............................

முகவரி ..............................

வியாபாரியின் பெயர் .............................. ஊர் ..............................



வணிக நண்பரே:

இக் கூப்பன், 400 கிராம் க்ளாக்ஸோஸ்-D பெட்டிகள் இரண்டு வாங்குவோருக்கு, அதன் விலையிலே ரூ 1.50 தள்ளுபடி பெற உரிமையளிக்கிறது. ஆனால், மேற்கூறிய விவரங்கள் முழுதும், சரிவரத் தெளிவாகப் புரியும்படி கூப்பனில் எழுதப்பட்டிருக்க வேண்டியது அவசியம்.

இரு பெட்டிகளின் மீதும் உள்ள, க்ளாக்ஸோஸ்-D என்றபெயர் தரித்த, துளைக்கோடிட்ட மேற்புற மூடி விளிம்புத் தாளைக் கிழித்தெடுத்து, கூப்பனோடு இணைத்து, எங்கள் விற்பனைப் பிரதிநிதியிடம் கொடுங்கள். இச் சேவையை ஈடு செய்ய நாங்கள் 100 கிராம் பேகெட் ஒன்றையும் தருகிறோம் உங்களுக்கு. நன்றி.

ஃபேமிலி பிராடக்ட்ஸ் டிவிஷன், க்ளாக்ஸோ லபாரட்டரீஸ் (இந்தியா) லிமிடெட்



daCunha/GL/381 TAM.






# இன்சரீ கண்ணீர்

— ரணஜித் தேசாய் —

நடுப் பகல் நேரம். நகரத்துக்கு வெளியே அகன்று நீண்டு ஓடிய காம்பவுண்டுக்குள் அரசாங்க ஆஸ்பத்திரியின் கட்டடம் உயர்ந்தோங்கி நின்றது. மக்கள் இங்கும் அங்கும் போய்க் கொண்டிருந்தார்கள் என்றாலும், விந்தை மிகு மௌனம் நிலவியிருந்தது. ஆஸ்பத்திரிக் காம்பவுண்டுக்குள் உயிரை வைத்துக் கொண்டிருந்த ஆலமரம் தன் இலைகளால் நிழல் பரப்பிக் கொண்டிருந்தது. மரத்தின் கிளைகளில் அமர்ந்து காக்கைகள் எழுப்பிய கர்ண கடூரமான குரல், நிலவியிருந்த மௌனத்துக்கு மாக ஏற்படுத்திக் கொண்டிருந்தது.

ஆப்பரேஷன் தியேட்டருக்கு எதிர்த்தாற் போலிருந்த வராந்தாச் சுவரில் முதுகைச் சாய்த்துக் கொண்டு ருக்மியும் விடோபாவும் உட்கார்ந்திருந்தார்கள். இருவருடைய பார்வைகளும் அறைக் கதவையே நோக்கியிருந்தன. திடீரென்று கதவு திறக்கும்போதெல்லாம் படீரென்று மருந்து நெடி பரவும். வெள்ளையாடை உடுத்திய நர்ஸ் வெளியே வருவாள். கறுப்புத் தரையில் 'டக், டக்' என்று பூட்ஸ் ஒலிக்க, வைத்த சாமானை எடுக்கப் போகிறவள் போல் விரைந்து சென்று மறைந்து விடுவாள்.

ருக்மிக்கு அழுகை குமுறிக் கொண்டு வந்தது. புடவைத் தலைப்பால் வாயைப் பொத்திக்கொண்டு அழுதாள். விடோபா பெருமூச்சு விட்டு, "எதற்காக இப்படி அழுகிறாய்? நான் சொல்வதைக் கேள். கவலைப்படாதே. நம் ஊர் சேது இருக்கிறானே, அவனுக்கு இப்படித்தான் உடம்பு வந்தது. போய்விட்டதாகவே முடிவுகட்டிவிட்டார்கள். இந்த டாக்டர்தான் போன உயிரைப் பிடித்துக் கொண்டு வந்தவர். நான் சொல்கிறேன், நீ வேண்டுமானால் பார்த்துக் கொண்டிரு. நம் கிருஷ்ணுவுக்கு ஒன்றும்ஆகாது!" என்றான். ருக்மி கண்களைத் துடைத்துக் கொண்டு அழுகையை நிறுத்தினாள்.

விடோபா என்னவோ ருக்மியைச் சமாதானப்படுத்தி விட்டான். என்றாலும் முதல் நாள் மாலை நிகழ்ந்த நிகழ்ச்சி அவன் கண்களை விட்டு அகலவில்லை.

எட்டு வயது கிருஷ்ணன் ஊர்க் குழந்தைகளோடு மாடு மேய்க்கப் போயிருந்தான். ஆனால் இருட்டுவதற்கு முன்னாலேயே மாடுகளை ஓட்டிக் கொண்டு திரும்பிவிட்டான். கொட்டிலில் கொண்டு போய்க் கட்டிவிட்டுத் திரும்பியவனுக்குத் திடீரென்று வயிற்று வலி பிடித்துக் கொண்டது. துடித்துப் போய்விட்டான். ருக்மி வயிற்றில் ஒத்தடம் கொடுத்தாள். ஜீரகத்தைத் தின்னச் சொன்னாள். என்ன செய்தும் வயிற்று வலி அதிகமாயிற்றே ஒழியக் குறையவில்லை. சிறுவன் கதறித் தீர்த்து விட்டான்.

விடோபா வயலிலிருந்து வீடு திரும்பிய பொழுது வாசலில் ஊரே கூடியிருப்பதைக் கண்டான். கிருஷ்ணன் ருக்மியின் மடியில் படுத்திருந்தான். உடல் தெப்பமாகிப் போயிருந்தது. கைகால்கள் எல்லாம் சில்லிட்டு விட்டன.

விடோபா சட்டென்று வெளியே வந்தான். கிராமத்திலிருந்து இரண்டு மைல் தொலைவில் 'ஹெல்த் சென்டர்' இருந்தது. தலை தெறிக்க ஓடி அங்கிருந்த டாக்டரின் காலைப் பிடித்துக் கொண்டான். அவரை அழைத்துக் கொண்டு வருவதற்குள் ஏறக் குறைய நள்ளிரவே ஆகிவிட்டது.

டாக்டர் கிருஷ்ணனைப் பார்த்தார். ஊசி போட்டார். டாக்டரோடு கூடவே விடோபா வெளியே வந்தான். 'டாக்டர் ஐயா! எனக்கு இருக்கிறது இந்த ஒரு குழந்தைதான்!" என்று இழுத்தான்.

டாக்டர் விடோபாவைப் பார்த்தார். அவன் கண்களில் நீர் குளம் கட்டியிருந்தது. "விடோபா! ஊசி போட்டிருக்கிறேன். குழந்தை தூங்கி விடுவான். ஆமாம், இந்த மாதிரி வலி முன்பு எப்பொழுதாவது வந்ததுண்டா?" என்று கேட்டார்.

"ஒரு முறை வந்திருந்தது. ஒத்தடம் கொடுத்ததில் குணமாகிவிட்டது!"

"இந்த முறை அது பயன் அளிக்கும் என்று தோன்றவில்லை. நான் ஒரு கடிதம் தருகிறேன். அதை எடுத்துக் கொண்டு பட்டணத்துப் பெரிய ஆஸ்பத்திரிக்குப் போய் வா!"

"சரிங்க!" விடோபா பெருமூச்சு விட்டான். டாக்டர் கடிதத்தைக் கொடுத்து விட்டுப் போய்விட்டார்.

பொழுது புலர்ந்து தரை தெளிவதற்குள்ளாகவே, குழந்தையை எடுத்துக்கொண்டு விடோபாவும் ருக்மியும் கிராமத்திலிருந்து நடந்தே ஒரு மைல் தொலைவிலிருந்த பெரிய ரோடுக்கு வந்துவிட்டார்கள். சிவப்புப் பஸ் புழுதியைப் பரப்பிக் கொண்டு வருவது தென்படவே, விடோபா குழந்தையைத் தூக்கிக்

கொண்டு எழுந்து நின்றான். ருக்மி மூட்டை முடிச்சைத் தூக்கிக் கொண்டு நின்றாள்.

பட்டணத்துப் பெரிய ஆஸ்பத்திரியில் குழந்தை கிருஷ்ணனைப் பரிசோதித்த டாக்டர் அவனை உடனே ஆப்பரேஷன் தியேட்டருக்கு எடுத்துப் போகச் சொல்லி விட்டார்.

விடோபாவும் ருக்மியும், ஆப்பரேஷன் தியேட்டருக்கு எதிர்த்தாற்போல் இருந்த வராந்தாச் சுவரில் முதுகைச் சாய்த்துக் கொண்டு உட்கார்ந்திருந்தார்கள். இருவருடைய பார்வைகளும் அறைக் கதவிலேயே பதிந்திருந்தன.

திடீரென்று கதவு திறந்தது. மடீரென்று மருந்து நெடி பரவியது. தள்ளு வண்டி வெளியே வந்தது. வண்டியைத் தள்ளிச் சென்ற வார்டு பாய் ஒரு முறை விடோபாவைப் பார்த்தான். பிறகு சட்டென்று வண்டியை ஒடித்து உருட்டிக் கொண்டே போய்விட்டான். வராந்தாவின் கறுப்புத் தரையில் வண்டி வழுக்கிக் கொண்டே ஓடிற்று. விடோபாவுக்கு அப்புறம்தான் தன் நினைவு வந்தது. பறந்து விழுந்து கொண்டு எழுந்தான். வண்டியை நோக்கி ஓடினான்.

"தம்பி! கொஞ்சம் கேளேன்!"

ஆனால் வண்டிக்காரன் திரும்பிக்கூடப் பார்க்கவில்லை. அவன் வண்டியைத் தள்ளிக் கொண்டே போய்க் கொண்டிருந்தான். ஆஸ்பத்திரியின் பின் வராந்தா வழியாக வண்டி போய்க் கொண்டிருந்தது. ஆஸ்பத்திரியின் வெளிக் காம்பவுண்டு தெரிந்தது. விடோபா நின்றான். அது வரை அவன் வண்டியோடு நடந்து கொண்டிருந்தான். வண்டியின் மேல் போர்த்தியிருந்த வெள்ளைப் போர்வையைப் பார்த்தவாறே, "ஆப்பரேஷன் ஆகிவிட்டதா, தம்பி!" என்று கேட்டான்.

"உம்." வண்டி நகர்ந்து கொண்டேயிருந்தது.

"ஆப்பரேஷன் நல்லபடியாக முடிந்ததா?"

வண்டி நின்றது. விடோபாவின் பார்வையிலிருந்து தப்ப முயன்றவாறே வார்டுபாய் பதில் சொன்னான்: "டாக்டர் தம்மால் இயன்ற முயற்சிகளையெல்லாம் செய்தார். ஆனால் ஆண்டவனுக்குச் சம்மதமில்லை போலும்! நோயாளி மேஜையின் மேலேயே போய் விட்டான்!"

வண்டி ஆஸ்பத்திரிக்கு வெளியே வந்தது. காம்பவுண்டில் இருந்த ஆல மரத்தை நோக்கி வண்டி முன்னேறியது. அப்பொழுதுதான் ருக்மியின் ஓலக் குரல் கேட்டது: "ஓ. கிருஷ்ணா!"

வார்டுபாய் வேகமாகத் திரும்பி ஓர் அதட்டல் போட்டான்: "பேசாதே! சத்தம் போடாதே. இது ஆஸ்பத்திரி. இங்கே அழக் கூடாது!"

ருக்மி புடவைத் தலைப்பைப் பல்லால் கடித்துக் கொண்டு அழுகையை உள்ளுக்குள்ளேயே விழுங்கினாள்.

வண்டி ஆலமரத்தின் அடியில் போய் நின்றது. வண்டியில் இருந்ததைக் கீழே எடுத்து வைத்துவிட்டு வார்டுபாய் திரும்பினான். போகும் பொழுது சட்டைப் பையிலிருந்து ஒரு காகிதத்தை எடுத்து விடோபாவிடம் கொடுத்து, "டாக்டர் சர்டிபிகேட் இது. உன்னை யாரும் தடுக்கமாட்டார்கள்!" என்றான்.

வார்டுபாய் வெற்று வண்டியைத் தள்ளிக் கொண்டு போய்விட்டான். விடோபா ருக்மியைப் பார்த்தான். ருக்மி போர்வையில் சுற்றியிருந்த குழந்தையின் காலடியில் உட்கார்ந்து, முழங்காலில் தலையைப் புதைத்து அழலானாள். குழந்தையின் பக்கம் பார்வையைச் செலுத்திய அவள் அச்சம் தவழும் கண்களோடு விடோபாவைப் பார்த்தாள். தன் துணிச்சலையெல்லாம் எப்படியோ ஒன்று கூட்டி. "அழுது என்ன பயன்? இப்பொழுது என்ன செய்யலாம், சொல். குழந்தையை ஊருக்கு எடுத்துப் போகலாமா, அல்லது இங்கேயே....!" என்று அவன் இழுத்தான்.

ருக்மி திடீரென்று தலையைத் தூக்கி



தமிழாக்கம்: ரா. வீழிநாதன்



**இதுவரை பால்பாயிண்ட் பேனா உபயோகத்துக்கு எத்தனை சந்தேகமும், தடையும் இருந்ததோ அதே அளவுக்கு பவுண்டன் பேனா வந்த புதிதில் அதற்கும் இருந்ததாம். அப்பொழுது ஸ்டீல் கட்டையினால் மை தொட்டு எழுதும் பழக்கம்தான் இருந்தது.** —பாபு - ஸ்டேட்ஸ்மேன்

---

னான். கண்கள் நீராடியிருந்தன. ''ஊருக்கே எடுத்துப் போவோம்!'' என்றான்.

''சரி!'' என்ற விடோபா தொடர்ந்து, ''ஆனால் அழாதே. நான் இதோ வந்து விட்டேன். அது வரை தனியாகவே உன்னால் உட்கார்ந்திருக்க முடியுமா?'' என்று கேட்டான்.

ருக்மி தலையை அசைத்தாள்.

''இதோ போனதும் வந்ததுமாக வந்துவிடுகிறேன்!'' என்று கூறிக் கொண்டே விடோபா ஆஸ்பத்திரிக் கேட்டைத் தாண்டி வெளியேறினான்.

ருக்மி குழந்தையைப் பார்த்தாள். ஆனால் போர்வையை நீக்கி அதன் முகத்தைப் பார்க்கத் துணிவு வரவில்லை. தனிமை தந்த அச்சத்தில் கண்ணீருமே வற்றிவிட்டது. முழங்காலுக்குள் முகத்தைப் புதைத்துக் கொண்டு அடித்த சிலையாக அமர்ந்திருந்தாள். ஆஸ்பத்திரிக் காம்பவுண்டுக்குள் நுழைந்த இரண்டொரு பெண்மணிகள் அவள் பக்கமாக வந்தார்கள். அவளையும் போர்வையில் சுற்றியிருந்த குழந்தையையும் பார்த்துவிட்டு வந்தபடியே திரும்பியும் விட்டார்கள்.

ருக்மிக்கு ஒவ்வொரு கணமும் பிணக் கனமாகக் கனத்தது. கணத்துக்கு ஒரு முறை அவள் பார்வை கேட்டைத் தாக்கி விட்டுத் திரும்பும். கொளுத்தும் வெய்யில் தலைக்கு மேலே வந்துவிட்டது. ஆலமரத்தின் கிளைகளில் அமர்ந்திருந்த காகங்கள் வேறு கரைந்து அவளைச் சித்திரவதைக்கு உள்ளாக்கின. விடோபாவை எதிர்நோக்கி அமர்ந்திருந்த ருக்மியின் மனம்கூட எங்கோ புதைந்துவிட்டாற்போல் இருந்தது. அவளுக்கு அழுகை அழுகையாக வந்தது. அந்தத் தடவை நிமிர்ந்து பார்த்த பொழுது விடோபா வருவது தெரிந்தது. அவன் கையில் என்னவோ இருந்தது. அருகில் வந்ததும் ருக்மி அவனை, ''வண்டி கிடைத்ததா?'' என்று கேட்டாள்.

''இல்லை!'' விடோபாவுமே சோர்ந்து போய் அவள் அருகில் அமர்ந்து கொண்டான். ஆனால் ருக்மியின் முகத்தைப் பார்க்கத் திராணியற்றவனாய் எங்கோ பார்த்துக் கொண்டு கூறினான்: ''எத்தனையோ சுற்றிப் பார்த்துவிட்டேன். ஒரு டாக்ஸிக்காரனும் வரத் தயாராயில்லை. கண்டித்து நூறு ரூபாய் கேட்கிறான். அப்பன் வீட்டுச் சொத்துப் பாழாகப் போகிறாற் போல....''

''இப்போ நீ....'' ருக்மிக்குப் பேச்சு ஓடவில்லை.

''இந்த நேரத்திலே எவனுமே இரக்கம் காட்டமாட்டேன் என்கிறான். கெஞ்சிக் கூத்தாடினேன், பிச்சை எடுக்காத தோஷமாக. ஊம், யாரும் தயாராயில்லை. இப்பொழுது நூறு ரூபாய்க்கு எங்கே போகிறது?''

''அந்தச் சாவாடு செத்த டாக்ஸியிலே தீயை வைக்க!'' ருக்மி 'பச்'சென்று எச்சிலைத் துப்பினாள். ''டாக்ஸி இல்லை என்றால் மாட்டு வண்டி பாரேன், அதிலே ஊருக்குப் போய்விடுவோம்!'' என்றாள்.

''ஊருக்குப் போய்ச் சேருவதற்குள் தாவு தீர்ந்து போய்விடுமே! அதுவரைக்கும் இந்தக் குழந்தை....''

ருக்மி வெல வெலத்துப் போனாள். அவள் விழிகளில் அச்சம் தாண்டவமாடியது. ''நீ என்ன செய்வாயோ, எனக்குத் தெரியாது. குழந்தையை ஊருக்குத்தான் எடுத்துப் போகணும். வேற்றூரிலே குழி தோண்டிப் புதைக்க எனக்கு மனம் வராது!'' என்று எரிச்சலைக் கக்கினாள்.

அதைத் தொடர்ந்து அழுகை பீறிக் கொண்டு வந்தது. ''அழாதே. ஒரு வழி இருக்கிறது. சம்மதிப்பாயா?'' என்று கேட்டான் விடோபா.

''என்ன, சொல்லு!''

''குழந்தையைப் பஸ்ஸிலே கொண்டு போய்விடுவோம். பஸ்ஸிலே பிணம் வைக்கக் கூடாது. அதனாலே தெரியாமல் எடுத்துப் போக வேணும்!''

ருக்மியின் கவனம் அப்பொழுதுதான் முதன் முதலாக விடோபாவின் பக்கத்தில் இருந்த பொருள் மீது பதிந்தது. அது ஒரு சாக்குப்பை; கயிறு சுற்றி வைக்கப்பட்டிருந்தது. அதைக் கண்டதும் ருக்மியின் கை வாயைப் பொத்தியது.

''இதுதான் வழி. இப்படிச் செய்தால்தான் குழந்தை கிராமத்துக்குப் போய்ச் சேரும்!''

ருக்மி தலை அசைத்துச் சம்மதம் தெரிவித்தாள்.

''அழக் கூடாது. அலறக் கூடாது. கண்ணிலே நீர்கூட வரக் கூடாது.''

ருக்மி அவன் சொன்னதற்கெல்லாம் தலையாட்டிச் சம்மதம் தெரிவித்தாள்.

''அழக் கூடாது. சொல்லிவிட்டேன். தப்பித் தவறி உன் துயரத்தை நீ காட்டினால், நம் இரண்டு பேருடைய கைகளிலுமே இரும்புக் காப்பு ஏறிவிடும். ஜாக்கிரதை!''

''இல்லை, அழமாட்டேன். நீ சொல்கிறபடி கேட்கிறேன்.''

''இனி நேரம் இல்லை. இன்னும் சற்று நேரத்திலே ஒரு பஸ் இருக்கிறது. நீ முதுகைத் திருப்பிக் கொண்டு உட்காரு!''

சாக்குப் பையைச் சுற்றியிருந்த கயிற்றை விடோபா அவிழ்க்கத் தொடங்கியதைக் கண்டதும் ருக்மி முகத்தைத் திருப்பிக் கொண்டு உட்கார்ந்தாள். நடந்ததை அவள் கண்களால் பார்க்கவில்லையே ஒழியக் காதுகளால் கேட்டுக் கொண்டிருந்தாள்.

''புறப்படு!'' விடோபாவின் குரல் கேட்டு ருக்மி திரும்பினாள். அவன் தோளில் ஒரு மூட்டையோடு நின்று கொண்டிருந்தான். ருக்மியும் தன் மூட்டை முடிச்சுக்களை எடுத்துக் கொண்டு எழுந்திருந்தாள். விடோபாவுக்குப் பின்னாலேயே நடக்கலானாள்.

பஸ் ஸ்டாண்டில் வண்டி தயாராக நின்று கொண்டிருந்தது. மூட்டையோடு விடோபா வண்டியில் ஏறினான். முன் இரு ஆசனங்களை

# புதிய ரெக்ஸோனா உங்கள் மேனியை மென்மையோடு மெருகு மிளிர வைத்திருக்கும் சோப்




ஆரோக்கியம் திகழும் மேனியை அடைய, சரும நலனைப்பெற நவீனகால மங்கையர் நாடுவது புதிய ரெக்ஸோனா. உங்கள் மேனியை மழமழ மென்மையோடு, அங்கமெங்கும் தங்க மெருகு மிளிர வைத்திருக்கும் சோப். குளித்திடுங்கள் ரெக்ஸோனா சோப்பினால்—உங்கள் சருமத்திற்கு இதுவே நல்லது.

## புதிய ரெக்ஸோனா உங்கள் சருமத்திற்கு நல்லது

லின்டாஸ்-RX-68-140 TM

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு.

புதிய

# உடனடி-உபயோக

# டிக்-20

மண்ணெண்ணை கலப்பதற்கான மேற்படி செலவு கிடையாது!



கலக்க வேண்டிய தொல்லை கிடையாது. திறந்து நேராக உபயோகிக்க வேண்டியதுதான். உடனடியாக மூட்டைப் பூச்சிகளை ஒழிக்கிறது. பிளவுகள், பொந்துகள், மெத்தைத் தையற்குழிகள், ஃபர்னிச்சர் ஜாயிண்ட்டுகள், சுவர்களிலுள்ள சட்டங்களின் அடிபாகங்கள் போன்ற பல இடங்களிலும் புதிய டிக்-20 உபயோகியுங்கள்.

புதிய டிக்-20 இப்போது அதிக பாதுகாப்பானது. வீட்டில் வைக்கலாம். காரணம் அது மீண்டும் புதுப்பிக்கப்பட்ட ஃபார்முலா கொண்டதாகும். முன் கூட்டியே மண்ணெண்ணை கலக்கப்பட்டு உடனடியாக உபயோகிக்க வசதியாக தயாரிக்கப்பட்டுள்ளது. சர்க்காரின் புதிய நிர்ணயங்கள்படி உள்ளது. உபயோகிப்போரின் பாதுகாப்பை உறுதி செய்கிறது.




## இன்றே டிக்-20 வாங்குங்கள்
## இன்றிரவே நன்றாக உறங்குங்கள்.


ஒரு ராலிஸ் இந்தியா தயாரிப்பு

RADEUS/RT-I

விட்டு விட்டு இருவரும் உட்கார்ந்து கொண்டார்கள். ருக்மி ஜன்னலோரமாக உட்கார்ந்து கொண்டாள். இரண்டு பேர் மடியிலுமாக அந்த மூட்டை இருந்தது. வண்டி சிறுகச் சிறுக நிறையலாயிற்று. முன் ஆசனத்தில் ஒரு கிழவி தன் பேரக் குழந்தையோடு வந்து உட்கார்ந்து கொண்டாள். அவள் அடிக்கு ஒரு முறை திரும்பி ருக்மியைப் பார்க்கலானாள். ருக்மி அவளைப் பார்க்க அஞ்சி சன்னலுக்கு வெளியே தன் பார்வையைப் பதித்திருந்தாள். கண்டக்டர் டிக்கெட்டுக்குக் காக கேட்ட பொழுதுதான் விடோபாவுக்குத் தன் நினைவு திரும்பியது. பையிலிருந்து ஐந்து ரூபாய் நோட்டை எடுத்து அவனிடம் கொடுத்து ஊரின் பெயரைக் கூறினான். டிக்கட்டுகளையும் மீதிச் சில்லறையையும் கொடுத்த பொழுது கண்டக்டரின் பார்வை அவர்கள் மடியிலிருந்த மூட்டை மீது விழுந்தது. ''இதில் என்ன கண்ணாடிப் பொருள் இருக்கிறதா?'' என்று கேட்டான்.

''இல்லை !'' பதற்றத்தோடு பதில் சொன்னான் விடோபா.

''அப்படியானால் எதற்காக மடியில் வைத்துக் கொண்டிருக்கிறாய்? கீழே வைத்துவிட்டுச் சௌகரியமாக உட்காருவதுதானே ?''

விடோபா பதில் கூறவில்லை. கண்டக்டர் அந்தண்டை நகர்ந்ததும்தான் நிம்மதியாகப் பெருமூச்சு விட்டான். அதற்குள் கடைசி ஆளுக்கும் டிக்கெட் கொடுத்துவிட்டுத் திரும்பிய கண்டக்டரின் பார்வை திரும்பவும் விடோபாவின் மடியிலிருந்த மூட்டையின் மீது விழுந்தது. ''ஏ, நாட்டுப்புறம்! இப்பொழுதுதான் முதல் தடவை பஸ்ஸிலே சவாரி செய்கிறாயா ? சாமான்கள் வைக்கிறதுக்குத்தான் சர்க்காரிலே இடம் பண்ணி வைத்திருக்கிறார்களே! எதற்காக மடியில் வைத்துக் கொண்டு கஷ்டப்படுகிறாய்?'' என்று கடிந்தான்.

''இருக்கட்டும். பரவாயில்லை, அண்ணே!''

''இரு, இரு ! சாமானை எப்படி வைக்கணும் என்கிறதை நான் காட்டுகிறேன்!'' என்று கூறிக் கொண்டு கண்டக்டர் அடி எடுத்து வைக்கவே விடோபா அவசரம் அவசரமாக மூட்டையை இருவருடைய கால்களுக்கு அடியிலும் போட்டுக் கொண்டான்.

''பார்த்தாயா, இப்பொழுது மட்டும் எப்படி வைத்துக் கொண்டாயாம் ?'' என்று கூறியவாறே கண்டக்டர் தன் இடத்துக்குப் போய்விட்டான். விடோபாவும் ருக்மியும் கண்களைத் தொங்கப் போட்டுக் கொண்டார்கள். ருக்மிக்கு அழுகை வந்தது. விடோபா முழங் கையால் அவளை இடித்து உஷார்ப்படுத்தினான். ருக்மி புடவைத் தலைப்பை வாயில் திணித்துக் கொண்டு ஜன்னல் வழியே வெளியில் பார்க்கலானாள். வண்டியும் புறப்பட்டது.

முன் ஆசனத்தில் அமர்ந்திருந்த கிழவி பின் திரும்பிப் பார்த்தாள். அவள் பொக்கை வாய் வியப்பை உதிர்த்தது. விடோபா பதறிப் போய்த் தானாகவே கூறினான்: ''இவளுக்குப் பஸ் ஒத்துக் கொள்கிறதில்லை !''

கிழவி தெரிந்தவள் போலச் சிரித்து, ''இது எத்தனை மாசமோ ?'' என்றாள்.

விடோபா வாயைப் பிதுக்கித் தலையை அசைத்தான்.

''குழந்தை இருக்கிறதல்லவா?''

''ஊம்!'' கேள்வியால் அரண்டுபோனவன் மூட்டையில் கால் படாமல் சட்டென்று தூக்கிக் கொண்டான்.

''பஸ் ஒத்துக் கொள்ளுகிறதில்லை என்றால், கையோடு எலுமிச்சம் பழம், இஞ்சி வைத்திருக்க வேண்டும். இப்படி வெளியே பார்த்துக் கொண்டே உட்கார்ந்திருந்தால் முகத்தில் காற்று அடிக்கும், மூச்சுத் திணறும். எனக்கும்தான் பஸ் ஒத்துக் கொள்ளுகிறதில்லை. அதற்காக நான் கையோடு இஞ்சித் துண்டு கொண்டு வந்துவிடுவேன்!'' என்று கூறியவாறே கிழவி தலைப்பில் முடிந்து வைத்திருந்த இஞ்சித் துண்டத்தை எடுத்தாள். ருக்மியிடம் நீட்டி, ''இந்தா ! இதை வாயிலே போட்டு ஒரு கடியாகக் கடித்துக் கண்களை மூடிக் கொள்ளு. கண்களை மூடிக் கொண்டு விட்டால், எதிர்த்தாற்போல் இருக்கிறது எதுவும் தெரியாது. தலையும் சுற்றாது; வாந்தியும் பண்ணாது !'' என்றாள்.

ருக்மி தலை அசைத்து வேண்டாம் என்பதாகச் சாடை காட்டினாள். விடோபா மீண்டும் அவளை முழங் கையால் இடித்தான். ருக்மி பேசாமல் இஞ்சித் துண்டத்தை வாங்கிக் கொண்டாள்.

'' வாயில் போட்டுக் கொள்!'' என்றாள் கிழவி.

ருக்மி இஞ்சித் துண்டத்தை வாயில் போட்டுக் கொண்டாள், வந்த ஆத்திரத்தில் வெடுக்கென்று வேகமாகக் கடித்தாள். கண்களை மூடிக் கொண்டாள். பாதையே கண்களுக்குப் புலப்படவில்லை. வண்டியின் ஆட்டம் எல்லாம்கூட அவளுக்குத் தெரியவில்லை. ஜன்னல் வழியே காற்று வேகமாக வீசுவது மட்டும் தெரிந்தது.

விடோபா முழங் கையால் இடித்தான். ருக்மி கண்களைத் திறந்து வெளியே பார்த்தாள். பஸ் ஊரை நெருங்கிவிட்டது என்பது விளங்கியது.

வண்டி நின்றது. அது நிற்பதற்குள்ளாகவே ருக்மி எழுந்தாள். நின்றதும் வேகமாக நடந்து முதலில் இறங்கியவள் அவள்தான். இறங்கியவள் இறங்கும் வழியைப் பார்த்துக் கொண்டு நின்றாள். விடோபா மூட்டையைத் தூக்கிக் கொண்டு இறங்கினான். வண்டிக் கதவு சாத்திக் கொண்டது. புழுதியைக் கிளப்பி கொண்டு வண்டி பார்வையிலிருந்து மறைந்தது.

ருக்மி கண்களை அகல விரித்து விடோபாவைப் பார்த்தாள். தோளில் சாத்தியிருந்த மூட்டையோடு நின்ற விடோபாவின் கண்களிலும் கண்ணீர் துளித்தது. அவன் வலுவெல்லாம் விடைபெற்றுக் கொண்டுவிட்டாற்போலவும் தோளிலிருந்த மூட்டை கீழே விழுந்து விட்டாற் போலவும் பதறி வெலவெலத்துப் போய்க் கண்ணீர் உதிர்த்தான்.

ருக்மி இருந்தாற்போலிருந்து இருமினாள். அடுத்த கணம் ஊரே கிடுகிடுக்க, ''ஐயோ, என் மகனே !'' என்று அலறினாள்.

தேங்கியிருந்த துயரம் வெடித்தது!

---

**ஜப்பானிய மொழியில் 'உழைப்பு' என்று பொருள்படும் வார்த்தைகள் 100க்கும் மேல் உள்ளன. ஆனால் 'ஓய்வு' என்ற வார்த்தைக்கு ஒரு வார்த்தை கூடக் கிடையாது.**

— பாலி



இன்றையக் கதை

# மண் தெய்வம்

பி.வி.ஆர்.

இந்த மூன்று வருடங்களில் நூற்றுக்கும் மேற்பட்ட கடிதங்கள் சுஜாவுக்கு வந்து விட்டன. 'கூடிய சீக்கிரத்தில் திரும்பி வந்து உன்னை மணையில் உட்கார்த்தி உன் கழுத்தில் மஞ்சள் நூலைக் கட்டி விடுகிறேன்' என்று வாக்குறுதி அளித்து விட்டு விமானம் ஏறினவன் அடுத்த வாரம் ஒரு வழியாகத் திரும்பி வருகிறான். ஆறுமாத அவசரப் பயிற்சிக்காகப் போனவன் திரும்பி வர முப்பத்தாறு மாதங்களா?

தன் முன் குவியலாகக் கிடந்த கடிதங்களையே பார்த்தவளாய் சுஜா உட்கார்ந்திருந்தாள். ஒவ்வொரு கடிதத்திலும் பூர்ணசந்திரனின் சிரிக்கும் முகம் தெரிந்தது. இங்கிருந்து போகும்போது இல்லாத மீசை அமெரிக்காவில் வளர்ந்திருக்கிறது. அவன் போன வருடம் அனுப்பியிருந்த ஒரு போட்டோவில் பூர்ணாவின் மீசையைக் கண்டு அவள் வியப்படைந்தாள். அவள் மீசையை எதிர்த்தவளும் அல்ல, ஆதரித்தவளும் அல்ல. ஆனால் அதை அடியோடு வெறுத்திருந்த பூர்ணா எப்படி இப்போது மனம் மாறி விட்டான்! அமெரிக்க மண் மாற்றி விட்டதா?

இப்போது கடிதங்களில் அவள் பார்த்த பிம்பங்கள் ஒன்றிலுமே அந்த அரும்பு மீசை இல்லை. அவனுடைய கற்பனையிலும் எழவில்லை. மெதுவாகக் கடிதங்களைத் தேதிவாரியாக அடுக்கி வைக்கலானாள். ஓரிரு கடிதங்களில் சிற்சில வரிகளையும் படித்துப் பரவசமடைய முயன்றாள்.

'இங்கே என்னை டாக்டர் பூர்ணா என்றுதான் அழைக்கிறார்கள்.

'நேற்று நயாகரா நீர்வீழ்ச்சியை ஒரு ஹெலிகாப்டரிலிருந்து பார்த்தேன். இயற்கையின் பயங்கரத்துக்கும் ஒரு தனி அழகு இருக்கிறது என்பதை உணர்ந்தேன்.

பிராட்வேயில் நாடகம் என்றால் அது ஒரு சரித்திரம். அதைக் கண்கூடாகப் பார்த்த எனக்குத் தியேட்டரை விட்டே வெளியேற மனமில்லை.'

சுஜாவுக்கு அலுத்தது. பூர்ணாவை ஒரு வெறும் மனிதனாக ஒரு பிரயாணியாக அவளுக்கு நினைத்துப் பார்க்கப் பிடிக்கவில்லை. இரண்டு மாதங்களுக்கு முன் வந்த ஒரு கடிதத்தில் அவனுடைய மனிதாபிமானம் மிளிர்ந்தது. அந்தக் கடிதத்தைத் தேடி எடுத்துப் படித்தாள்.

ஓர் ஏழைச் சிறுவன். ஏழு வயது. ஜுரத்தின் கொடுமையில் கண் மூடிக் கிடக்கிறான். அவனுடைய தாயாரும் சகோதரிகளும் கட்டிலைச் சுற்றி நின்று, கேவிக் கேவி அழுகிறார்கள். 'டாக்டர், நீங்கதான் எங்க பிள்ளையைக் காப்பாத்தணும்' என்று தாயார் இறைஞ்சுகிறாள். சிறுவன் உடம்பைப் போர்த்த ஒரு கம்பளிகூட இல்லை. வெடவெடக்கும் குளிரில் என்ன செய்வது? என்னுடைய உல்லன் ஓவர்கோட்டைச் சிறுவன் மீது போர்த்துகிறேன். இரவு முழுதும் அவன் கட்டிலருகேயே உட்காருகிறேன். ஒரு மணிக்குக் கண் விழிக்கிறான். கஞ்சி சாப்பிடுகிறான். மூன்று மணிக்கு ஜுரம் இலேசாகக் குறைகிறது. காலை ஆறு மணிக்கு எல்லோரையும் பார்த்துப் புன்முறுவலிக்கிறான். பதினெட்டு நாட்கள் ஜுரத்தில் இருந்தவன், பிழைக்க மாட்டான் என்று என் எண்ணத்திலே இறந்து போனவன் இன்று இந்தக் கடிதத்தை எழுதும்போது தெருவிலே துள்ளி விளையாடிக் கொண்டிருக்கிறான். அவர்கள் என்னைப் புதுவருஷ டின்னருக்கு அழைத்திருந்தார்கள். பையனுக்கு அறுபது டாலர்களில் ஓர் உல்லன் கோட்டு பரிசளித்தேன்.

சுஜா, ஒரு மனிதனுடைய படிப்பும் தேர்ச்சியும் இன்னொரு மனிதனுக்கு, அவன் வாழும் சமூகத்துக்குப் பயன் அளிக்கிறபோதுதான், கல்விக்கே தெய்விகம் உண்டாகிறது. நான் அந்தப் பையனின் உயிரைக் காப்பாற்றி விட்டதாக, பாவம் அந்தத் தாய் நினைக்கிறாள். நான் என்ன நினைக்கிறேன், தெரியுமா? கடவுள் எனக்கு ஒரு வாய்ப்பைக் கொடுத்தார்; நான் கடவுளின் நன்மதிப்புக்கு ஆளானேன். அவ்வளவுதான்....

சுஜாவின் கண்களில் நீர் முட்டியது. அந்தக் கடிதத்தை மீண்டும் மீண்டும் அவளுக்குப் படிக்கத் தோன்றியது. எழுத்துக்களை மறைக்கும் நீர்த்திவலை ஒரு பெரும் அலையாகத் தோன்றியது. ஒருவேளை நயாகராவே அவளுடைய பூர்ணசந்திரனைப் பார்க்க ஒட்டாமல் தடுக்கிறதோ?

''சுஜா!''

இன்னும் கையிலிருக்கும் கடிதத்தைப் படிக்காமல் அவள் திரும்பிப் பார்த்தாள்.

''என்னடி பைத்தியம் மாதிரி பழைய குப்பைகளை அள்ளிண்டிருக்கே?''

''இதெல்லாம் குப்பையென்று நீ நினைக்கிறாயா, அம்மா?''

''சரி, குப்பை இல்லை. மாணிக்கப் புதையல்தான் ... சீக்கிரம் எழுந்திரு. நெக்லஸ் சட்டறவனுக்கு வைரத்தை எடுத்துக் கொடுக்கணும்.''

''ஏம்மா இதுக்கு இப்ப என்னம்மா அவசரம்?''

''என்ன அவசரம்னு கேட்கறே? பூர்ணா அடுத்த புதன் கிழமை வர்றான். ஞாயித்துக் கிழமை எல்லாரும் ஊருக்குப் போகிறோம். அங்கே திங்கட்கிழமை உங்க கல்யாணம் முடிஞ்சதும் நீங்க மெட்ராஸ் வந்து விமானம் ஏறுகிறீர்கள்... எங்கே நேரம்?''

''முகூர்த்தத்தை எங்களைக் கேட்காமலே வைச்சிருக்கீங்க. என்னதான் மாமா பிள்ளைதான் என்றாலும் பூர்ணா உங்களுக்கெல்லாம் மாப்பிள்ளை. அவரைக் கேட்க வேண்டாமா?''

''சரித்தான் தெரியும்மா. இந்தியாவிலே எட்டு நாட்களுக்கு மேலே இருக்கமுடியாது. அதுக்குள்ளே கல்யாணத்தை ஸிம்ப்ளா வைச்சுக்கப் பாருங்கன்னு நமக்கு எழுதியிருக்கான். அண்ணாவுக்கும் எழுதியிருக்கான். சரி, சரி, எழுந்திரு.''

''ரிடர்ன் ... ஃபிளைட்டுக்கும் ஏற்பாடு பண்ணியாச்சா?''

''அதெல்லாம் அவனே பண்ணியாச்சு. கல்யாணம் ஆன சாயங்காலமே காரிலே நீயும் அவனும் மெட்ராசுக்குத் திரும்பறீங்க. பத்தே காலுக்கு பாம்பே பிளேன். அங்கிருந்து ராத்திரி புறப்படுகிறீர்கள்.''

''சரி, பார்க்கலாம்.''

''என்னமா, சரி பார்க்கலாம்னு விட்டேத்தியாப் பேசறே?''

''இல்லேம்மா நான் அப்பாகிட்டே பேசிக்கிறேன்.''

''நீ யார்கிட்டே வேணும்னாலும் பேசு. இப்போ இரும்புப் பெட்டியிலிருந்து வைரங்களை எடுத்துண்டு வா!''

''அப்பா!''

''என்ன சுஜா!''

அதை ஒட்டி ஒரு நவீன லேபரட்டரி! ஏம்பா, நீங்க கட்டின அழகான கட்டடத்துக்கும் பாபிஷேகம் செய்யாமலே இருக்கீங்க?''

''நான் என்னம்மா செய்யறது? விக்கிரகம் அமெரிக்காவிலேந்து வர மாட்டேன் என்கிறதே?''

''ஏம்பா பொறுப்புள்ள நீங்களா இப்படிப் பேசறீங்க? பூர்ணாவை நீங்க படிக்க வைச்சீங்க .... ஒரு இம்பார்ட்டெண்ட் டிரெயினிங்னு போகணும்னார். முப்பதாயிரம் ரூபாயை வீசி எறிஞ்சீங்க.''

''ஏம்மா பழசை யெல்லாம் கிளர்றே ... பூர்ணா யாரு. உன் மாமா பிள்ளைதான் .... நாளைக்கு உன் புருஷன்தானே?''

''ஆமாம்ப்பா. அவர் என் மாமா பிள்ளைதான்... ஆனால் அவர் நாளைக்கு என் புருஷராங்கறது நிச்சயமில்லே.''

''என்ன சுஜா பேத்தறே....''

''பயிற்சின்னு போனவர் திரும்பத்தானே திரும்பியிருக்கணும். மாதம் இரண்டாயிரம் டாலர் கிடைக்கறதுன்னு ஏன் அங்கேயே இருக்கணும்?''

''இது அவனவனுடைய விருப்பம்மா... இங்கே நம்ம ஊரிலே இல்லாத வசதி அங்கே இருக்கோ என்னமோ?''

''இல்லாத வசதியோடே எதிர்த்துப் போராடி, வசதியை ஏற்படுத்திக்கறதுதான் அப்பா மனுஷனுக்கு லட்சியமா இருக்கணும்... நம்ம வீட்டுக் குழந்தை சரியில்லேங்கறதுக்காகப் பக்கத்து வீட்டுக் குழந்தையை நாம் தத்து எடுத்துப்போமா?''



''மூணு வருஷம் முன்னாலே அபிராமபுரத்திலே ரெண்டு லட்சம் ரூபாய்க்கு ஒரு பெரிய பங்களா வாங்கினீர்களே?''

''ஆமாம். அதுக்கென்ன?''

''அதை எதுக்காக வாங்கிப் போட்டீங்க?''

''அந்த மூணு மாடிக் கட்டிடத்தை ஏன் வாங்கினேன்னு இப்போ மனசு உதைச்சுக்கிறது...''

''ஏம்பா, கீழே ஏழைகளுக்கு இலவச வைத்தியம். ஏழைப் பெண்களுக்குப் பிரசவ விடுதி முதல் மாடியிலே. பணக்காரர்களுக்கு வைத்தியம் மூன்றாவது மாடியிலே.



சிலருக்குப் புள்ளி விவரங்கள், குடிகாரனுக்கு லாந்தர் கம்பம் எப்படி பயன்படுகிறதோ அப்படி பயன்படுகின்றன. கீழே விழாமல் சாய்ந்து கொள்ளலாம். ஆனால் வெளிச்சம் எதுவும் கிடைக்காது.

- பாலி

— தி எகனாமிஸ்ட் — பவன்ஸ் ஜர்னல்

---

''நீ என்ன சொல்லறே, இப்போ?''

''அம்மா எனக்கு வைர நெக்லஸ் பண்றதிலே தீவிரமா இருக்கா. முதல்லே, நீங்க மூணு லட்சம் ரூபாய்க்கு வாங்கிப் பூட்டிப் போட்டிருக்கிறீர்களே ஒரு பங்களா, அதை கிளினிக்கா மாற்றத் தீவிரமா இருங்கோ ...

''கல்யாணம்?''

''அதைப் பூர்ணு வந்தப்புறம் தீர்மானம் செய்து கொள்ளலாம்.''

புதன்கிழமை அன்று பூர்ணசந்திரன் மீனம்பாக்கத்தில் இறங்கிக் கொண்டிருந்த அதே வேளையில் சுஜா, அபிராமபுரத்தில் நடந்து கொண்டிருந்த வேலையை மேற்பார்வை பார்த்துக்கொண்டிருந்தாள். கட்டில்களும் மெத்தைகளும் இறங்கிக் கொண்டிருந்தன. ஒரு பெரிய மருந்துக் கம்பெனியிலிருந்து நூற்றுக்கணக்கான மருந்து வகைகள் இன்னொரு பக்கம் ஒரு வேனில் வந்து இறங்கின. மாடியில் ஆபரேஷன் தியேட்டரில் வேலை நடந்து கொண்டிருந்தது.

தன் மன உறுதியைத் தானே பாராட்டிக் கொண்டாள் சுஜா. அவள் மெதுவாக நடந்து ஆபரேஷன் தியேட்டரில் என்ன செய்கிறார்கள் என்று பார்க்கப் புறப்பட்டாள்.

''சுஜா!''

ரமணன் காரிலிருந்து இறங்கி வந்துகொண்டிருந்தார்.

''என்னப்பா?''

''பூர்ணு வந்தாச்சும்மா!''

''அதுக்கு என்ன?''

''நீ விமான நிலையத்திலே சந்திக்க வரலேன்னு மகா கோபம் அவனுக்கு!''

''நீங்க ஏதேனும் சொல்லிச் சமாளிச்சிருப்பீங்களே!''

''இதைப் பத்தி நான் இன்னும் சொல்லலே....''

''கடைசி வரை சொல்லாதீங்க ... இந்த ரெண்டு போர்டுகளைத் தவிர, மத்த போர்டுகளையெல்லாம் மாட்டச் சொல்லப் போகிறேன்.''

ரமணன் பார்த்தார். ஒரு பெரிய போர்டு. காம்பவுண்டு சுவருக்கு அருகே வைக்கப்பட வேண்டியது. அதில் பூர்ணசந்திரனின் பெயர் பெரிதாக எழுதப்பட்டிருந்தது.

இன்னொன்று சிறியது. டாக்டருடைய அறைக்கு வெளியே சுவரில் மாட்டப்பட வேண்டியது.

வியாழக்கிழமை அன்றுதான் பூர்ணசந்திரனுக்கு எல்லாம் தெரிந்தது. அவன் வந்து இருபத்து நான்கு மணி நேரமாகிறது. இன்னும் சுஜாவைச் சந்திக்கவில்லை.

பார்வதியைக் குடைந்து எடுத்ததில் அவள் உண்மையைச் சொன்னாள்.

''அத்தை! என்ன உளர்றீங்க? இப்ப நான் பன்னிரண்டு நாள் லீவில் வந்திருக்கிறேன். அதுவும், சுஜாவைக் கல்யாணம் பண்ணிக் கொண்டு அழைத்துப் போக....''

''டேய் பூரணு! சுஜாவோடு அப்பா, நீ டாக்டர் தொழிலே இங்கேயே நடத்தணும்னு தான் அபிராமபுரம் பங்களாவை வாங்கினார்.''

''இப்ப நான் என்ன செய்ய முடியும்? அமெரிக்காவிலே இருந்து பழக்கப்பட்டுட்டேன். இனிமே எப்படி அதை விடறது.''

''இருபத்து மூணு வருஷம் இந்தியாவிலே இருந்தப்புறம்தானே உங்களுக்கு அமெரிக்க மண் வாசனை கிடைச்சுது!''

திடீரென்று பூர்ணு திரும்பிப் பார்த்தான். சுஜா கை விரலில் சாவி வளையம் விளையாடச் சிரித்துக் கொண்டே நின்றாள்.

''சுஜா!''

''ஆமாம் பூர்ணு ... இருபத்து மூணு வருஷப் பழக்கத்தை மூணு வருஷத்திலே உதறி எறியற உங்களாலே, மூணு வருஷப் பழக்கத்தை மூணு நாட்களிலே உதறி எறிய முடியும்.''

''உனக்கு அமெரிக்காவைப் பற்றித் தெரியாது, சுஜா!''

''எனக்கு நம்ம ஊரைப் பத்தி நன்னாத் தெரியும்.''

''இந்த வருஷத்திலேந்து எனக்கு மாசம் மூவாயிரம் டாலர் சம்பளம் ... ஒரு டாலர்னு எவ்வளவு ரூபாய் தெரியுமா?''

''டாலரிலே கிடைக்கிறது உடம்போடே சுகம்தான் டாக்டர்! ஆனா இந்த மண்ணிலே பிறந்து இந்த மண்ணிலேயே புரண்டு வாழும் சுகம் இருக்கே, அது வெறும் சுகம் இல்லே. உங்க ஆத்மிக சுகமே அதுதான்.''

''ஐ ஆம் ஸாரி சுஜா!''

''ஐ ஆம் ஸாரி, பார் யூ பூர்ணு!''

''என்னாலே இருக்க முடியாது. இங்கே வசதிகள் இல்லே ...''

''உங்களுக்கு எங்கே எது ஆதாரமா இருந்தது? மயிலாப்பூர் நாடி வாத்தியார் ஸ்கூல் படிப்பு ... மயிலாப்பூர் ஹைஸ்கூல் படிப்பு. சர்க்கார் உங்களுடைய வைத்தியப் படிப்புக்காகச் செலவு செய்தார்களே அரை லட்சம் ரூபாய் ... இதெல்லாம் தான் உங்களுக்கு ஆதார சக்தி ... உங்க மூலதனம்... ஆனா நீங்க இதையெல்லாம் எதுக்குப் பயன்படுத்தறீங்க...? உங்க சுய சுகத்துக்கு... அந்த டாலர் குவியல்லே புரள்றதைவிட, இங்கே குப்பை மேட்டிலே புரளலாம், உங்களாலே ஆயிரம் ஏழைகள் பிழைப்பாங்க!''

''என்னாலே முடியாது, சுஜா!''

''என் அப்பாதான் உங்களைப் படிக்க வைச்சார்.''

''சுஜா, மூடு வாயை!'' என்றாள் பார்வதி.

''உண்மைதான் சுஜா! உன் அப்பாவும் அம்மாவும் இல்லேன்னா, நான் இன்னிக்கு டாக்டராக இருக்க முடியாது.''

''அமெரிக்காவை நீங்க அட்லாஸ்லேதான் பார்த்திருப்பீங்க!''

# எக்காரணத்திற்கும் பொருத்தமானவை
# பிலிப்ஸ் லூமினேர்கள்







ஒவ்வொரு பிலிப்ஸ் லூமினேரும்
எண்ணற்ற பல கருத்துக்களை
மனதில் கொண்டு உருவாக்கப்பட்ட
தாகும். அழகான தோற்றம் முக்கியம்தான்
என்றாலும் அது சிக்கனம், ஒளித்திறன்,
தரம் இவற்றுக்கடுத்தபடிதான்.
மிகச் சிறந்த மூலப் பொருட்கள்
தேர்ந்தெடுக்கப்படுவதுடன், தயாரிப்பு
முறையும் கடும் பரிசோதனைக்குள்ளாக்கப்
படுகிறது. ஒவ்வொரு தொகுப்பிலிருந்தும் ஒரு
சாம்பிள் எடுத்துத் தீவிரமாக செயல்படு
நிலையில் பரிசோதிக்கப்படுகிறது.
ஒவ்வொரு ஒளி அமைப்பிற்கும் ஏற்ற ஒரு
பிலிப்ஸ் லூமினேர் கிடைக்கிறது. சீரான
ஒளியினைப் பெற சிறந்த சாதனப்பிணைப்பு.











## பிலிப்ஸ்—லாம்ப் மற்றும் ஒளித்துறையில் முன்னோடிகள்




# பிலிப்ஸ்

பிலிப்ஸ் இந்தியா லிமிடெட்

PHL 9366

### கல்கி சந்தா விவரம்

| | ஒரு வருடம் ரூ. பை. | ஆறு மாதம் ரூ. பை. |
|---|---|---|
| இந்தியா | 38-00 | 19-00 |
| இலங்கை (இலங்கைநாணயம்) | 38-00 | 19-00 |
| இதர வெளி நாடுகள் | 90-00 | 45-00 |

''கரெக்ட். உன் அப்பா என் படிப்புக்கு எத்தனை ஆயிரம் செலவழிச்சிருக்காரோ, அத்தனையையும் வட்டியோடே திருப்பிக் கொடுத்துடறேன்....''

''இது என்ன, நீங்க பார்க்கிற வைத்தியத்துக்குக் கூலியா கொடுக்கிற ஃபீஸ் மாதிரியா? எங்க அம்மாவும் அப்பாவும் வெறும் பணம் தான் கொடுத்தாங்கன்னு நீங்க நினைக்கிறீங்களா..? அன்பு பாசம், அபிமானம் எல்லாம் சேர்த்துக் குழைச்சுக் கொடுத்தாங்க. அதையெல்லாம் எத்தனை வட்டியோடே, எப்போ எப்படித் திருப்பிக் கொடுக்கப் போறீங்க?''

''ஏய் சுஜா, போதும்மா, உன் நாக்கொழுப்பு. பேசாமல் இரு. இந்தா பூர்ணு, நீ வாழறது உன் வாழ்க்கை. அதை நீ உன் இஷ்டம் போல் எங்கே வேணும்னாலும் வாழ்ந்து கொள்...''

பார்வதி முடிப்பதற்கும், தோட்டக்காரன் லிங்கம் பதறிக் கொண்டு ஓடி வருவதற்கும் சரியாக இருந்தது.

''தம்பி! என் பேரப்பிள்ளையைக் கொஞ்சம் வந்து பாருங்க!''

''என்ன அவனுக்கு?''

''ஏழெட்டு நாளா காய்ச்சல், தம்பி ... மிளகும் திப்பிலியும் அரைச்சுக் கஷாயம் போட்டுக் கொடுத்தோம். நெத்தியிலே பத்துப் போட்டோம். அப்புறம் டாக்டர் கிட்டே போய் ஊசி போட்டது... ஜுரம் இறங்கலிங்க. இப்போ திடீரென்று கைகால் உதறி அடிக்குது. வா, தம்பி.''

''சீக்கிரம் ஆஸ்பத்திரிக்கு எடுத்துட்டுப் போ, லிங்கம்!'' என்றாள் பார்வதி.

''அம்மா நம்ம வூட்டுப் புள்ளே மேல் படிப்பு படிச்சுட்டு வந்திருக்கு. அது கை தொட்டா எங்க வூட்டுப்புள்ளே பிழைச்சுடுவான்னு எனக்குத் தோணுது. வா, தம்பி!''

பூர்ணு எழுந்தான். ஏறிட்டுப் பார்த்த போது சுஜா அங்கே இல்லை.

மூன்றும் முறையாக லிங்கம் கெஞ்சினான்.

''இந்தாப்பா லிங்கம், நான் இப்போ டாக்டரா வரலைப்பா, இங்கே எத்தனையோ பெரிய டாக்டரெல்லாம் இருக்காங்க. அம்மா சொல்ற மாதிரி ஆஸ்பத்திரிக்கு அழைத்துக் கொண்டு போ!''

லிங்கம் வேறு வழி இன்றி நகர ஆரம்பித்தான். திடீரென்று வந்த சுஜா கத்தினாள். ''லிங்கம், இரு.''

பிறகு, ''நான் இப்போ படிக்கப் போறதைத் தயைசெய்து எல்லோரும் கேளுங்கள்'' என்றாள்.

''ஒரு மனிதனுடைய படிப்பும் தேர்ச்சியும் இன்னொரு மனிதனுக்கு, அவன் வாழும் சமூகத்துக்குப் பயன் அளிக்கிறபோதுதான் கல்விக்கே தெய்விகம் உண்டாகிறது.''

''சுஜா!'' என்றான் பூர்ணு.

''நீங்க அமெரிக்காவிலே ஒரு சின்னஞ்சிறு ஏழைப் பையனுக்கு அறுபது டாலரிலே உல்லன் கோட்டு பரிசளித்தீங்களே, நினைவிருக்கா... அந்தப் பையனுடைய தம்பி தான் லிங்கத்தின் பேரன்!''

''அடுத்த கணம், ''சுஜா, நீயே தயை செய்து காரை ஓட்டு!'' என்றான் பூர்ணு.

**வி**யாழன்.

லிங்கத்தின் பேரன், இன்னும் இறக்கப்படாத கிளினிக்கில் உயிருடன் போராடிக் கொண்டிருந்தான். கட்டிலைச் சுற்றி லிங்கன், அவனுடைய மனைவி, மகன், மருமகள் எல்லோரும் சூழ்ந்துகொண்டிருந்தார்கள். சுஜா கால்மாட்டிலேயே உட்கார்ந்திருந்தாள்.

''சுஜா, இதில் பிழைத்தால் தான் உண்டு!''

''பிழைப்பான்!''

''எப்படிச் சொல்றே...?''

''இங்கே... நீங்க பார்க்கிற முதல் வைத்தியம் என்ன பேசாமல் இருக்கிறீர்கள்?''

''எனக்கு என்னமோ நம்பிக்கை இல்லை.''

''பிள்ளை பிழைத்தால், நாளன்னிக்குத் திறப்பு விழா... இல்லேன்னு, திங்கட்கிழமை நீங்க பிளேன் ஏர்றீங்க... ஓ.கே.''

''.... ஊஹூம். நான் அமெரிக்கா போகலே.''

''ஏன் இந்தத் திடீர் மாற்றம் பூர்ணு!''

''இந்தப் பிள்ளை மாற்றி விட்டான்... இவனை மாதிரி கோடிக்கணக்கான பேர், நான் பிறந்த மண்ணில் நெளிகிறார்கள்.... அவர்கள் நெளிவது நிற்க வேண்டும்...என்னை மாதிரி ஆயிரக்கணக்கான பேர் வெளிநாட்டு மண்ணிலே நெளிகிறார்கள். அந்த நெளியல் நின்றுத்தான் இதுவும் நிற்கும். ஆமாம்... தெய்வம் நமக்கு ஒரு வாய்ப்பைக் கொடுக்கிறது. தெய்வத்தின் நன்மதிப்புக்கு ஆளாவதுதான் மனிதனின் கடமை.''

சுஜா, ''அவனைப் பாருங்கள்!'' என்றாள்.

லிங்கத்தின் பேரன் இலேசாகக்கண்விழித்து எல்லோரையும் ஒரு தடவை பார்த்து விட்டு, ''அம்மா, தண்ணீர்'' என்றான்.

''இனி கவலை இல்லை....! லிங்கம், விடிந்து விட்டது!'' என்றான் பூர்ணு.

''லிங்கம்! டாக்டர் ஐயா என்ன சொல்கிறார், தெரியுமா? விடிஞ்சுட்டுதுங்கிறார்! அது உன் பேரனுக்கு மட்டும் தான்னு எண்ணிக்காதே ... நம்ம எல்லோருக்கும்தான்.''

''இனிமே (என்) தெய்வம் அமெரிக்காவுக்குத் திரும்பிப் போகாது!'' என்று சுஜா பூர்ணு காதுக்கு மட்டுமே கூறினாள்.

முகத்தில் அரும்பிய வியர்வையைத் துடைக்க, பாண்ட் பாக்கெட்டிலிருந்து கர்ச்சீபை எடுத்தான் பூர்ணு. கூடவே ஒரு சிறு பச்சை நிறக் காகிதமும் விழுந்தது.

''இந்தாங்க, ஏதோ துண்டு பேப்பர்'' என்று லிங்கம் குனிந்து எடுத்து நீட்டினான்.

''அது பேப்பர் இல்லே, டாலர்!'' என்றாள் சுஜா!

# சவாலைச் சந்தித்தேன்

**1936** அல்லது 37ம் ஆண்டு என்று நினைக்கிறேன். அப்போது நான் புரசைவாக்கம் பகுதியில் உள்ள ஃபெப்ரீஷியஸ் உயர்நிலைப் பள்ளியில் 'சீனியர்' தமிழ்ப் பண்டிதராக வேலை பார்த்து வந்தேன்.

திடீரென்று உடல் நலம் பாதிக்கப்பட்டது. என் நண்பர்கள், என்னை, டாக்டர் குருசாமி முதலியார் அவர்களிடம் வைத்தியம் செய்து கொள்ளும்படி தூண்டினார்கள்; நான் சம்மதித்து அவர் வீட்டுக்குச் சென்றேன்.

டாக்டர் என் முகத்தைக் கவனித்தார். பிறகு என் வலக் கையை மேஜை மீது உள்ளங் கை மேஜையில் படும்படி வைக்கச் சொன்னார். பிறகு தம் கையிலிருந்த தினசரிப் பத்திரிகையை எட்டாக மடக்கி என் புறங்கை மேல் வைத்துவிட்டுச் சில நிமிஷங்கள் கவனித்தார். அப்புறம் கேள்விகள் கேட்க ஆரம்பித்தார்.

''என்ன அரிசி சாப்பிடுகிறீர்கள்?''

''பச்சரிசி!'' இது என் பதில்.

''நீர் சைவமா? அசைவமா?''

''நான் சைவம்.''

''நீர் இந்த இரண்டையும் கைவிட வேண்டும். இவை கூட உம் உத்தியோகத்தையும் விட்டு ஓய்வு எடுத்துக் கொள்ள வேண்டும்.''

''அது எப்படி நான் இப்போது அசைவத்தைக் கடைப்பிடிப்பது?''

''உம் பெற்றோர்கள் மாமிசம் சாப்பிடுபவர்கள். அந்த ரத்தம் உம் உடலில் ஓடுகிறது. உம் புதுப் பழக்கம் உம் ரத்தத்தோடு ஒத்துப் போகவில்லை. இதோ இரண்டு மாத்திரைகள் எழுதித் தருகிறேன். உம்முடைய 'லோ பிளட் பிரஷர்' (Low Blood Pressure) குணமாய்விடும்.''

டாக்டர் முதலியாரிடம் விடைபெற்றுக் கிளம்பினேன். அப்போது அந்த மிஷன் பள்ளியின் கரெஸ்பாண்டண்டாக இருந்தவர் டாக்டர் ஃபிராலிக் என்ற ஜெர்மானியர். அவரைச் சந்தித்து மருத்துவர் யோசனையைச் சொன்னேன். அவர் ஒரு கனவான். ''நீங்கள் தாராளமாக ராஜிநாமாச் செய்யுங்கள். கர்த்தர் உங்களுக்குப் பூரண ஆரோக்கியத்தைக் கொடுப்பார். உங்களுக்கு எப்போது விருப்பமோ, அப்போது நீங்கள் இதே பதவியில் சேர்ந்து கொள்ளலாம்'' என்று சொல்லி விடை கொடுத்தார்.

வீட்டுக்கு வந்து மாடி அறையில் சோர்வுடன் உட்கார்ந்தேன். நிரந்தர வருமானமுள்ள உத்தியோகம் இனி இல்லை! இந்தச் சவாலை எப்படிச் சமாளிப்பது?...

சிறிது நேரத்துக்கெல்லாம் என்னைச் சந்திக்க யாரோ வந்திருப்பதாகச் சொன்னார்கள். மேலே வரச் சொன்னேன்.

வந்தவர் தம்மை அருணாசலக் கவுண்டர் என்று அறிமுகப்படுத்திக் கொண்டார். அவர் சென்னை சர்வ கலாசாலை பாடப் புத்தகங்கள் பொறுக்கும் குழுவுக்குத் தம் புத்தகம் ஒன்றைச் சமர்ப்பித்திருந்தாராம். அங்குள்ள அவருடைய நண்பர், அந்தப் புத்தகத்தில் உள்ள சில குறைபாடுகளைச் சுட்டிக் காட்டி, உடனடியாக அவைகளை நீக்கி, புத்தகத்தை ஒரு புதுப் பதிப்பாக அச்சடித்து இருபது நாட்களுக்குள் மீண்டும் அனுப்பி வைக்கச் சொல்லியிருக்கிறார்.

அதை அச்சிட ஒப்புக் கொண்ட அச்சக உரிமையாளர், கவுண்டரிடம், இந்த மாதிரி பதிப்பு வேலைக்கு நான்தான் உகந்தவன் என்று சொல்லி அனுப்பி வைத்திருக்கிறார்.

கவுண்டர் புருஃப் பாரத்தையும் நூறு ரூபாய் நோட்டு ஒன்றையும் தட்டில் வைத்து என்னிடம் நீட்டினார். அந்த நாட்களில் நூறு ரூபாய் என்பது பெரிய தொகை. ஆகவே நான் மிகவும் தயங்கினேன். அவருக்கு என்னால் உதவ முடியும். ஆனால் அதற்காக நான் இவ்வளவு பெரிய அன்பளிப்பை எதிர்பார்க்கவில்லை.

சற்று நேரம் கழித்து என் தாயார் மாடிக்கு வந்தபோது அந்த நூறு ரூபாய் நோட்டை அவர்களிடம் கொடுத்தேன். ''அம்மா! வீட்டில் ஓய்வெடுத்துக் கொண்டவாறே பார்க்கும்படியான ஓர் உத்தியோகம் ஆண்டவன் அருளால் தேடி வந்திருக்கிறது...'' என்று அவரைத் திருப்திப்படுத்தினேன்.

அன்று என் வாழ்க்கையின் திருப்பமே நேர்ந்தது என்று சொல்லலாம். என் வாழ்க்கைச் சவாலைச் சந்திக்க வீட்டிலிருந்தே பல தமிழ் இலக்கிய நூல்களைப் பதிப்பிக்கும் புனித வேலையை மேற்கொண்டேன்.

நான் அந்த நாட்களில் மதிப்புக்குரிய சேஷாசலம் அய்யர் அவர்களிடமும் கோவிந்தராஜ முதலியார் அவர்களிடமும், கற்ற தமிழ் எனக்கு இருந்த இடத்திலிருந்தே வாழ வழி காண்பித்தது. அதை வளமாக்கவும் உதவியது. இந்த உற்சாகத்தில் என் உடல்நிலையும் நன்கு அபிவிருத்தி அடைந்தது.

**மகாவித்வான் மே. வீ. வேணுகோபால் பிள்ளை அவர்களிடம் கேட்டு எழுதியவர் :**
**பட்டினத்தார்**

# வைத்தியர் விருப்பமும், ஆண்டவன் அருளும்!







# இளைஞர் விழா!

மயிலாப்பூர், பி. எஸ். ஹைஸ்கூல் மைதானத்தில் தொடங்கி 15 நாட்கள் நடந்த 'எனது இந்தியா' பொருட்காட்சி பாரதப் பிரதமரின் இருபது அம்சத் திட்ட விளக்கமாக அமைந்திருந்தது. இது இளைஞர்களால், இளைஞர்களுக்காக நடத்தப்பட்ட இளைஞர் திருவிழா. ஜவாஹர்லால் நேரு தேசிய இளைஞர் கேந்திரம். என்றும் குன்றா இளமை மிடுக்குடன் விளங்கிய பண்டித ஜவாஹர்லால் நேருவின் பெயர் இந்த இளைஞர் சங்கத்துக்கு மிக மிகப் பொருத்தமானது :

பாரதத்தின் வெவ்வேறு மாநிலங்களிலிருந்தும் விஜயம் செய்திருந்த இளம் பிராயத்துப் பிரதிநிதிகளோடு இளைஞர் திருவிழா நடைபெற்றிருக்கிறது. 1968ம் ஆண்டு தொடங்கிய இந்தக் கேந்திரத்தில் தமிழ் நாட்டின் கிளைதான் மிகவும் இளமையானது. ஏனென்றால் 1974ம் ஆண்டுதான் தமிழ் நாட்டுக் கிளை தொடங்கிற்று.

இவ்விளைஞர் திருவிழாவை ஒட்டி நடந்த கருத்தரங்கில் அறிஞர்கள், தலைவர்கள், பல சொற்பொழிவாளர்கள் பங்கு பற்றிச் சிறப்பித்தனர். இந்தக் கண்காட்சியை, பாரத அமைச்சர்களில் இளைஞரான திரு கல்லா தொடங்கி வைத்தது மிகவும் பொருத்தமானதுதான்!

இருபது அம்சத் திட்டங்களை விளக்கி ஒவ்வொரு திட்டத்துக்கும் ஒரு படம் வைத்துச் சிறப்பாகச் செய்திருந்தார்கள். மகாராஷ்டிரம், ஜம்மு, காஷ்மீர், உத்தரப் பிரதேசம் முதலிய மாநிலங்களிலிருந்து கைத்திறன்களை வெளிப்படுத்தும் கலைப் பொருள்கள் அருமையாக இடம் பெற்றிருந்தன.

மாலை வேளைகளில் பல சுவையான கலை நிகழ்ச்சிகள் நடைபெற்றன. பல்வேறு ராஜ்ய நடனங்களுக்கு இடையில், மகாராஷ்டிரத்தின் நாடோடி நடனங்கள் அனைவரையும் வியப்பில் ஆழ்த்தின.

இரண்டு வார காலம் நடைபெற்ற இவ்விளைஞர் விழாவுக்கு, கடைசி நாளன்று பாரத மந்திரிகள் திரு ராம் நிவாஸ் மிர்தாவும், திருமதி சுசீலா ரோஹாட்கியும் வந்து கௌரவித்தனர். கண்காட்சியில் பங்கு பற்றிய மாநிலப் பிரதிநிதிகளுக்குப் பரிசுகள் வழங்கப் பெற்றன.

''எனது இந்தியா'' கண்காட்சியில் பல பாங்கிகளின் ஸ்டால்கள் தங்கள் சாதனைகளைக் கவர்ச்சியாக வெளியிட்டிருந்தன. யுனைடெட் கமர்ஷியல் பாங்கிக்கு இரு மத்திய சர்க்கார் மந்திரிகளும் விஜயம் செய்தனர். அவர்களை உதவி ஜெனரல் மானேஜர் திரு எம். கிருஷ்ணன் அன்புடன் வரவேற்றார்.

ஜவாஹர்லால் நேரு தேசிய இளைஞர் கேந்திரத்தின் தமிழ் நாட்டுக் கிளையின் தலைவர் திரு எஸ். விசுவநாதன் இளைஞர் திருவிழாவின் தொடக்கம் முதல் கடைசி வரையில் மிகவும் உற்சாகமாக இருந்து எல்லோரையும் உற்சாகப்படுத்தினார்.



- ''எனது இந்தியா'' கண்காட்சியில் யுனைடெட் கமர்ஷியல் பாங்கி அதிகாரிகள்.
- கண்காட்சியைப் பார்வையிட்ட மத்திய சர்க்கார் மந்திரிகள். பின்னால் ஜி. பூவராகன் எம்.பி.
- கண்காட்சியில் மத்திய மந்திரி திருமதி சுசீலா ரோஹாட்கியும், ஜவாஹர்லால் நேரு தேசிய இளைஞர் கேந்திரத்தின் தலைவர் திரு விசுவநாதனும், யுகோ பாங்கி உதவி ஜெனரல் மானேஜர் திரு எம். கிருஷ்ணனும்.

# வளர்ச்சியின் ஒவ்வொரு கட்டத்திலும் உடம்புக்குத் தேவை கால்ஷியம்-ஸாண்டோஸ்®



கர்ப்பத்தின் ஆரம்பக் கட்டத்திலேயே குழந்தையின் பற்களிலும் எலும்புகளிலும் அமையத் தொடங்குகிறது கால்ஷியம். கருவிலுள்ள குழந்தைக்கு அதிகப்படி கால்ஷியம் அவசரமாகத் தேவை. எனவே, வழக்கத்தைவிட இருமடங்கு தேவைப்படும் உங்களுக்கு முன்னதாகவே சாப்பிடத் துவங்குவீர் கால்ஷியம்-ஸாண்டோஸ்.



பாப்பாவின் பற்களுக்கும் எலும்புகளுக்கும் கால்ஷியம் வழங்குவது பாலூட்டும் தாயன்றி வேறில்லை. அவளுக்கு வழக்கத்தைவிட மும்மடங்கு கால்ஷியம் தேவை.

வளரும் குழந்தைக்கு வலுவான எலும்புகளும் கல்முள்ள பற்களும் அமைய இன்றியமையாதது கால்ஷியம். எனவே, பெரியோரைவிட குழந்தைக்கு அதிகக் கால்ஷியம் தேவைப்படும்.





ஒவ்வொரு கட்டத்திலும், ஒவ்வொரு வயதிலும், மனித உடம்புக்கு அத்யாவசியம் கால்ஷியம். மிகச் சிறந்த வடிவிலுள்ள கால்ஷியம்: கால்ஷியம்-ஸாண்டோஸ். ராஸ்ப்பெர்ரி சுவையூட்டிய இனிமையான கால்ஷியம்-ஸாண்டோஸ், நாள் ஒன்றுக்கு 2 அல்லது 3 வில்லைகள் போதும், உங்கள் கால்ஷியம் தேவையை நிறைவுசெய்யும், வைட்டமின் C, D, B 12 சத்துக்களோடு.

**நம்பிக்கைக்குரியோர் ஸாண்டோஸ்-கால்ஷியம் துறையிலே உலக முன்னோடிகள்.**




## கால்ஷியம்-ஸாண்டோஸ்®
## வில்லைகள் தினமும் தேவை எவருக்கும்

dCA/CS/15 I TAM



## விவாதமேடை!

# 'ஈ.எஸ்.ஐ.' திட்டம் திறம்பட இயங்குகிறதா?

தொழிலாளர் ஆரோக்கிய நல இன்ஷ்யூரன்ஸ் (ஈ.எஸ்.ஐ.) திறம்பட இயங்குகிறதா என்ற கேள்விக்கும் பதிலாக வந்த கடிதங்கள் அனைத்துமே இத்திட்டத்தில் குறைபாடுகள் நிறைய இருப்பதையே சுட்டிக் காட்டுகின்றன. பல கடிதங்கள் வேறு சில குறைபாடுகளையும் சுட்டிக் காட்டியிருக்கின்றன. உதாரணமாக, உடல் நலம் நன்றாக உள்ளவர்கள் இதன் பணியைப் பயன்படுத்திக் கொள்ளாமலே இருக்கிறார்கள். ஆனால் அவர்கள் வேண்டா விருப்பாகவே சந்தா கட்ட வேண்டியிருக்கிறது. தொழிலாளர் பங்கையும் நிறுவனத்தின் பங்கையும் சேர்த்தால் மூன்று மடங்கு இந்த ஈ. எஸ். ஐ. நிறுவனம் பயன் அடைகிறது. அதில் பாதியாவது திரும்பக் கிடைத்தால் இதன் பலனைத் தவறான முறையில் பெறுபவர்கள்கூடத் திருந்தக் கூடும் என்ற கருத்து பெரும்பான்மையான கடிதங்களில் பிரதிபலித்துள்ளது. எனவே, இதன் நோக்கங்களை அடியோடு மாற்றி அமைத்து மக்களுக்கும் பயன் உள்ளதாகச் செய்ய வேண்டியது அரசின் தலையாய கடமையாகும். - ஆசிரியர்

★ குடும்பக் கார்டு வாங்க மிகப் பெரிய க்யூ. கார்டைத் தேடித் தருபவர்களுக்குச் சோம்பேறித்தனம். சில சமயங்களில் நமக்கே தேடிக் கொள்ளும் சுதந்திரம் வழங்கப்படுகிறது. இதில் வெற்றி பெற்றால் அடுத்த கட்டம் டாக்டரிடம் செல்வது.

டாக்டரின் அறைக்குச் சென்றால் உடம்பு இன்னது என நாம்பாட்டுக்குச் சொல்லிக் கொண்டே இருக்க வேண்டும். டாக்டர் 'பூம் பூம்' மாடு போல் தலையாட்டிக்கொண்டிருப்பாரே தவிர பதில் ஏதும் கூறுவதில்லை. நம்மைச் சோதித்துப் பார்ப்பதும் இல்லை. இந்நிலையில் அவர் தரும் மருந்தைச் சாப்பிடுவதற்கே பயம். ஒன்றிடக்க ஒன்று ஆகி விட்டால்?

உண்மையில் நோய் இருப்பவர்கள் லீவு வாங்குவது மிகக் கடினம். கேள்வி மேல் கேள்வி, மறுப்பு. ஆனால் ''ஸம்திங்'' என்று முதலிலேயே டாக்டரிடம் தள்ளி விட்டால் போதும், உடலில் நோய் ஏதும் இல்லாமலே லீவு கிடைத்து விடும். வாங்கும் மருந்து மாத்திரைகள் வழியிலேயே ஒரு குப்பைத் தொட்டியைச் சரணடையும்.

ஈ. எஸ். ஐ. என்றால் நம் கண் முன் இவ்வளவும் தோன்றி அச்சுறுத்துகிறது. ஆஸ்பத்திரியில் சேர்ந்து சிகிச்சை பெறுவதென்றாலோ அதைப் போன்ற 'பூலோக நரகம்' வேறெங்கும் இருக்க முடியாது. இப்படி இயங்கும் ஈ. எஸ். ஐ. தொழிலாளர் ஆரோக்கியத்தைக் காப்பாற்றுகிறது எனில் வேதனை கலந்த சிரிப்புத்தான் வருகிறது!

எஸ்ஸார், சென்னை-82

□ தொழிலாளர் நல இன்ஷ்யூரன்ஸ் திட்டம் ஒரு சமுதாய நலத் திட்டம் என்றாலும் திறம்பட இயங்கவில்லை.

தொழிலாளர்களிடையே ஈ. எஸ். ஐ. பற்றி ஒரு விழிப்புணர்வை ஏற்படுத்த வேண்டும். இது ஒரு சமூக நலத் திட்டம் என்பதை ஒவ்வொரு தொழிலாளரையும் உணர வைக்க வேண்டும். அதிர்ஷ்டவசமாகத் தேக ஆரோக்கியத்துடன் உள்ள தொழிலாளர்கள் தாங்கள் செலுத்தும் பணம் வீணாகிறதே என்று எண்ணாமல் அப்பணம் துரதிர்ஷ்டவசமாக வியாதியாயுள்ள தங்கள் சக தொழிலாளர்களுக்குப் பயன்படுகிறதே என்று சந்தோஷம் அடைய வேண்டும்.

வி. ஆர். திருவேங்கடத்தான், டால்மியாபுரம்

★ இத்திட்டத்தின் முதன்மையான, நேர்மையான நோக்கம் தமது சம்பளத்திலிருந்து உரிய தொகையைச் சந்தாவாகச் செலுத்தக் கூடிய தொழிலாளர்களுக்குச் சீரிய கவனத்துடன் நேரடியான வைத்திய வசதிகளை வழங்குவதேயாகும். ஆயின், மருத்துவச் சான்றிதழ் வழங்குபவர்க்கும் பெறுபவர்க்கும் லாபத்தை அளிக்கக்கூடிய வகையில் வியாபாரரீதியில் மட்டுமே செயற்படுகின்றது.

மருத்துச் சான்றிதழ்களைப் பெறக்கூடிய தொழிலாளர்கள், தான் மருத்துவ விடுப்பில் இருக்கக் கூடிய தகவலைத் தொழிற்சாலைக்குக் கூடத் தெரிவிக்காது இருக்கின்றனர். அதன் மூலம் விடுப்பில் இருக்கும் காலத்தில் (1) தொழிற்சாலையில் ஊதியம் பெறுதல்; (2) உள்ளூர் காரியாலயத்திலும் ஊதியம் பெறுதல் (3) விடுப்புக் காலத்தில் தனது சொந்த வியாபார விஷயங்களைக் கவனித்தல் போன்ற மூன்று நன்மைகளையும் பெறுகின்றனர்.

நோயாளிகளுக்கு விபத்து ஏற்பட்டாலோ அல்லது மருந்தகம் வர இயலாத அளவுக்கு நோய்வாய்ப்பட்டிருந்தாலோ நோயாளியை அவரது தொழிற்சாலைக்கும் வீட்டுக்கும் சென்று பார்க்க வேண்டிய மருத்துவர் இத்திட்டம் தொடங்கியகாலம் தொட்டு அப்படிச் செயல் பட்டதாகச் சரித்திரம் கூறவில்லை.

படிப்பறிவு இல்லாத சில தொழிலாளர்களுக்குநிவாரண ஊதியம் கொடுக்கும்போது, ''உனக்கு நீ போட்ட பத்து நாட்களுக்கும் பணம் வராது. மூன்று நாட்களுக்கான பணம்தான் வரும். இதில் கையெழுத்துப் போடு என விண்ணப்பத்தில் கையெழுத்து வாங்கிக் கொண்டு மூன்று நாட்களுக்கான பணத்தை மட்டும் கொடுத்துவிட்டு மீதம் உள்ளதை எல்லோருமாகப் பங்கிட்டுக் கொள்வதும் நடைமுறை வழக்கு. தொழிலாளியின் மாதச் சம்பளத்திலிருந்து பிடித்தம் செய்யும் சந்தாத் தொகையை உடனடியாகக் கார்ப்பரேஷனுக்குச் செலுத்தாமல் தனது நிர்வாகத்துக்குரிய செலவுகளுக்கு வைத்துக் கொள்கின்றன பல தொழிலகங்கள். இதனால் எங்களது அட்டைகளை Exit செய்து விட்டதாகக் கூறி எங்களுக்கு வைத்திய வசதிகள் மறுக்கப்படுகின்றன.

பத்மநாபன், திருப்பூர்

□ ஈ. எஸ். ஐ. மருத்துவமனைக்கு நோய் இருப்போரும் இல்லாதோரும் சென்று விடுப்பு (Leave) கேட்கிறார்கள். நோயாளிகளில் அதிர்ஷ்டமும் சாமர்த்தியமும் உள்ளவர்கள் விடுப்பு வாங்கி விடுகிறார்கள். மற்றவர்கள் டாக்டர்களையும் கார்ப்பரேஷனையும் வசை பாடிக்கொண்டு திரும்புகிறார்கள்.

சாதாரண நோய்களுக்கு அதாவது மருந்து வாங்கிக் கொண்டு வீட்டில் ஓய்வு எடுத்துக்கொள்ளும் சாதாரண நோயாளிகளுக்கு மருத்துவ உதவி மட்டும் கொடுத்துப் பண உதவி நிறுத்தப்பட வேண்டும்.

மருத்துவ மனையில் படுக்கையில் ஒரு வாரத்துக்கு மேல் இருந்து சிகிச்சை பெறும் தொழிலாளர்களுக்கும், மற்றும் அம்மை நோயினால் பாதிக்கப்பட்டவர்கள், பேறுகால விடுமுறையில் இருப்பவர்கள் ஆகியோருக்கு மட்டும் பண உதவி அளிக்க வேண்டும்.

உள்ளூர் அலுவலகத்தில் (Local office) உதவித் தொகை கணக்கிடும்போது, தொழிற்சாலைகளில் வேலை செய்யாத, பண்டிகை, தேசிய விடுமுறை, ஓய்வு லீவு ஆகிய நாட்களுக்கு வாங்கும் சம்பளத்தைக் கழித்துவிட்டு மீதி நாட்களுக்கு உதவித் தொகை கணக்கிட வேண்டும். அதாவது வேலை செய்யாமல் சம்பளம் வாங்கும் நாட்களுக்கு ஈ.எஸ்.ஐ. உதவிப் பணம் நிறுத்தப்பட வேண்டும்.

மேலும் தொடர்ந்து இந்தத் திட்டத்தில் எந்த வித உதவியும் பெறாமல் இரண்டு ஆண்டுகளுக்கு மேல் (Four Benifits periods) இருந்தால் அவர்கள் செலுத்திய சந்தாத் தொகையில் குறைந்தபட்சம் 25 சதவிகிதம் திருப்பிக் கொடுக்க வேண்டும்.

மேற்சொன்ன யோசனையை நடைமுறைப்படுத்தினால் இந்த நோயே இல்லாமல் விடுமுறை எடுக்கும் பழக்கம் நின்றுவிடும். அவர்கள் வாங்கிக் கொண்டு போய் வீதியில் விட்டெறிந்துவிடும் ஏராளமான மாத்திரைகளும் மிச்சப்படும். உதவித் தொகையாகக் கொடுக்கும் பணமும் கூட்டமைப்புக்கு (Corporation) நிறைய மிச்சப்படும். தொழிலாளியும் தொழிற்சாலையும் கொடுக்கும் சந்தா விகிதங்களைக் கூடக் குறைக்க முடியும்.

டி. ரங்கநாதன், உடுமலைப்பேட்டை

★ ஈ. எஸ். ஐ. என்று கூறிய மாத்திரத்திலேயே தொழிலாளி தேவையானபோது லீவு வாங்கும் இடம் என்றே பெரும்பாலோர் நினைக்கின்றனர்.

சிலர் தங்கள் உறுப்பினர் அட்டையை மற்றவர்களுக்குக் கொடுத்து உரிமை இல்லாதவர்களுக்கு மருந்து வாங்க உதவுகிறார்கள். சில இடங்களில் மருந்து குறைவுக்கு இதுவும் ஒரு காரணம்.

க. லோகநாதன், பெங்களூர்-38

□ சமீபத்தில் எங்களது தொழிற்சாலையில் கர்டர் பாதத்தின் மீது விழுந்து, ஓர் ஊழியருக்குக் கால் விரல்கள் நான்கை எடுக்க வேண்டி நேர்ந்தது. ஈ. எஸ். ஐ. மருத்துவ மனையில் சரிவர அவரைக் கவனிக்காததால், அவர் தனியார் மருத்துவ மனையில் சேர்க்கப்பட்டு அறுவைச் சிகிச்சை பெற்றார்.

ஒரு விபத்தில் ஓர் ஊழியருக்கு முதுகு எலும்பு பழுதாக, அந்த ஊழியர் மதுரை எர்ஸ்கின் மருத்துவ மனைக்கும், திருச்சிராப்பள்ளி ஈ. எஸ். ஐ. மருத்துவ மனைக்குமாக அலைந்து கொண்டிருக்கிறார். அவரது நாட்கள் எண்ணப்பட்டு வருகின்றன.

ஓர் ஊழியரின் வயதான தாய்க்கு, அந்த ஊழியர் இறந்து ஒன்றரை ஆண்டு காலத்துக்குப் பிறகு ரொக்க உதவி கிடைத்திருக்கிறது. அதுவும் எவ்வளவு, தெரியுமா? ஒரு நாளைக்கு 187½ பைசே.

ஓர் ஊழியர் மரணமடைந்தால், அவருடைய இறுதிச் சடங்குக்காக ரூ. 100 ஈ. எஸ். ஐ. கார்ப்பரேஷன் வழங்குகிறது. இந்த 100 ரூபாயைப் பெறுவதற்கான நிபந்தனைகள் ஏராளம். அவற்றைப் பூர்த்தி செய்வதற்குள் பல மாதங்கள் சென்றுவிடும்.

ஆக, மரணமடைந்த ஊழியரின் இறுதிச் சடங்குக்கான இந்த உதவித் தொகை நிச்சயமாக அந்தக் காரியத்துக்குப் பயன்படாது.

சமீபத்தில் இந்த ஈ. எஸ். ஐ. திட்டம் திருத்தப்பட்டு, ரூ. 1000 வரை ஊதியம் பெறுபவர்களும் இத் திட்டத்தின் கீழ் பயனடைய மத்திய அரசு ஏற்பாடு செய்திருக்கிறது. மத்தியதர வர்க்கத்தினர் ஈ.எஸ்.ஐ. உதவிகளை நாடுவதில்லை. கடன் இழவே என்று வயிறு எரிய அவர்கள் பங்குத் தொகை செலுத்துவானேன் ?

ரூபாய் ஐந்நூறுக்கு மேல் ஊதியம் பெறுபவர்களுக்கு இத்திட்டத்தை ஏற்பது அவர்கள் விருப்பத்தைப் பொறுத்த அரசாங்கம் விட்டிருக்கலாம்.

எம். என். ராமசாமி, திருச்சி-4

★ என் சம்பளத்தில் இத்தனை நாட்களும் வாரத்துக்கு ரூ. 1.75 வீதம் பிடித்து வந்தார்கள். இப்போது நான்கு மாதங்களுக்கு மேலாக வாரத்துக்கு ரூ. 2.75 வீதம் பிடிக்கிறார்கள். பணம்தான் அதிகமாகப் பிடிக்கிறார்களே ஒழியப் பலன் அதிகரிக்கப்படவில்லை!

இத்திட்டத்தில் பங்குகொண்ட ஒவ்வொரு தொழிலாளியும் ஆண்டு ஒன்றுக்கு 56 நாள் விடுமுறை எடுக்கலாம் என்று விதி இருக்கிறது. நோயால் பாதிக்கப்பட்டு விடுமுறை எடுப்பவர்களைப் பற்றிக் கவலை இல்லை. ஆனால் இத்திட்டம் ஆரம்பித்த காலத்திலிருந்து எத்தனையோ தொழிலாளர்கள் விடுமுறை எடுக்காமல், மருந்து வாங்காமல் இருந்து வருகிறார்கள். இவர்களுக்கு ஒவ்வோர் ஆண்டு முடிவிலும் குறிப்பிட்ட தொகையைப் போனஸாகக் கொடுப்பதற்கு வழிசெய்ய வேண்டும். இது பொய்யாக லீவு எடுப்பதைக் கட்டுப்படுத்த உதவும்.

தொழிலாளர்களுக்குக் கண் பரிசோதனையோடு விட்டு விடாமல், அவர்களுக்கு வேண்டிய மூக்குக் கண்ணாடியும் கொடுப்பதற்கு ஏற்பாடு செய்ய வேண்டும்.

ஆ. ஏழுமலை, சென்னை-94

# மேயர் மீனாட்சி

ஒரு படத்துக்கு விமரிசனம் எழுதப் புகு முன் திரைக் கதையைச் சுருக்கமாக வாசகர்களுக்குச் சொல்லிவிட்டு அப்புறம் விமரிசனம் தொடங்குவது என் வழக்கம். படத்தைப் பார்க்காதவர்களையும் என் விமரிசனத்தைப் படிக்கச் செய்ய வேண்டும் என்பது என் கருத்து. ஆனால் அபிராமி மூவிஸ் அளிக்கும் ''மேயர் மீனாட்சி'' அந்த அவசியத்தை எனக்கு வைக்கவில்லை. திரைக் கதை என்று ஒன்றை வைத்துக்கொண்டு அவர்கள் அவதிப்படவில்லை. ஒரு 'பெரிய' நடிகை ஹீரோயினாக வருவதால், அவரை மேலும் எடுப்பாகக் காட்டப் பல சம்பவங்களைப் புனைந்து, கதம்ப நிகழ்ச்சியாகத் திரைக் கதையைத் தயாரித்திருக்கிறார்கள்.

திரைக் கதை சேரியில் நடப்பதால், பாத்திரங்களின் உரையாடல்களை எவ்வளவு மட்டமாகப் பண்ண முடியுமோ அவ்வளவு மட்டமாக, சேரிவாசிகளே வெட்கப்படும் அளவுக்குப் பண்ணியிருக்கிறார்கள்.

மீனாட்சி ஒரு சாதாரணக் குப்பைக்காரி—நகரசபை மேயராகப் பதவி ஏற்கிறாள். அவளை ஆதரிக்க ஒரு பெரிய மனிதர்-பழைய மேயர். அவளை எதிர்க்க ஓர் அயோக்கியர்—அதாவது பதவியில் இருக்கும் மேயர்; இவர் பல சதிச் செயல்களைச் செய்கிறார் — படத்தின் வில்லனாயிற்றே! மீனாட்சிக்கு எதிர்ப்பும், ஆதரவும் கிடைத்த பிறகு, காதலும் கிடைக்க வேண்டியதுதானே! சேரிவாழ் ''பெருங் குடிமகன்' பங்காரு — அதாவது ஜெய் சங்கர்தான் குப்பைக்காரி மீனாட்சியின் காதலன். சதா குடிபோதையில் இருக்கிறார்.

கே. ஆர். விஜயா கையில் பிளாஸ்டிக் பக்கெட்டும் துடைப்பமுமாகப் படம் முழுவதும் வளைய வருகிறார். நகரசபை அலுவலகத்தில் அவர் துப்புரவுப் பணி புரியும்போது 'பெரிய' நடிகையின் ஆதிக்கம் நன்கு தெரிகிறது. குப்பைக்காரிக்கு எந்த நாட்டிலும் எந்த ஊரிலும் அவ்வளவு அதிகாரமும் அந்தஸ்தும் கொடுக்க மாட்டார்கள்.

மீனாட்சி மேயரானதும், சேரி பாஷை மாறி விடுகிறது. ஆங்கிலம்கூடப் பேசுகிறாள். ஆனால் பாவம், அவள் காதலன்! அவன் கடைசி வரையில் அசிங்கமாகத்தான் பேசுகிறான். ஆனால், இடையில் மீனாட்சியும் பங்காருவும் காதல் டூயட் பாடும்போது மட்டும் நல்ல பாஷையில் பாடுகிறார்கள். (நல்லவேளை! அதையும் அசிங்கமாக்காமல் இருந்தார்களே!)

கே. ஆர். விஜயாவும், ஜெய்சங்கரும் காதல் டூயட் பாடும் இடங்களைக் காஷ்மீரில் படமாக்கியிருக்கிறார்கள். ஆனால் அதைப் பார்த்து மகிழ்வதற்குப் பதிலாக ரசிகப் பெரு மக்கள் பெருமூச்சு விடுகிறார்கள்.

வில்லனாக வரும் வி. கே. ராமசாமி முரட்டுக் குரலில் கத்தாமல், தமாஷாகவே 'வில்லன்' வேலையைச் செய்கிறார். அது நன்றாகவே இருக்கிறது. நல்ல மனிதர், முன்னாள் மேயர், டி. கே. பகவதி மிகவும் பெருந்தன்மையாக நடிக்கிறார். தேங்காய் சீனிவாசன், நகரசபைக் குமாஸ்தா ஐயராக வந்து குப்பைக்காரியின் கையைப் பிடித்து இழுத்து அவளிடம் வாங்கிக் கட்டிக் கொள்கிறார். (இதில் என்ன நகைச்சுவையோ, என்ன கண்றாவியோ!)

இது ஈஸ்ட்மென் கலர்ப்படம். ராமச்சந்திரனின் ஒளிப் பதிவைப் பாராட்டலாம்.

மதுரை திருமாறன், திரைக் கதை, வசனம் டைரக்ஷன் பொறுப்பை ஏற்றிருக்கிறார். மூலக் கதை கவி சுப்பிரமணியம்.

யாருக்குக் காது குத்த நினைத்தாலும், ஊருக்கெல்லாம் காது குத்த முடியாது; எப்படித்தான் இம்மாதிரிப் படங்களை எடுக்கிறார்களோ!

— காந்தன்






ஒரு நகப்பனர் தன் பிள்ளைகள் ஒவ்வொருவரைப் பற்றியும் பெருமையாகச் சொல்லிக் கொண்டு வந்தார்:

''மூத்த பையன் இஞ்சினியராக இருக்கிறான். பிரில்லியண்ட் ஃபெலோ. இரண்டாமவன் டாக்டராக இருக்கிறான். ரொம்ப கெட்டிக்காரன். மூன்றாமவன் ஆர்க்கிடெக்டாக இருக்கிறான். பெரிய ஜீனியஸ்.''

ஒரு நண்பர்: நீர் பாக்கியசாலி. உம்ம பிள்ளைகள் எல்லாரும் அம்மாவைக் கொண்டிருக்கிறார்கள். சந்தேகமேயில்லை!

பத்திரிகையில் புகைப்படத்துடன் ஒரு விளம்பரம்:

அப்பா!

பழையதை மறந்து விடுங்கள். இப்படிச் சண்டை போட்டுக் கொண்டு நீங்கள் வீட்டைவிட்டு ஓடிப் போகலாமா? நான் முன்கோபிதான். முரடுதான். அதற்காக இந்த விஷயத்தில் உங்களைத் திட்டவோ அடிக்கவோ மாட்டேன். நீங்கள் இதைக் கண்டவுடன் வீடு திரும்புங்கள். (படுத்த படுக்கையாய்க் கிடந்த அம்மா, நீங்கள் போன பிறகு வெகு சுறுசுறுப்பாக இருக்கிறாள்!)

பி.கு.:

மேற்படி நபரைக் கண்டு பிடிப்பவர்கள் ஒரு மாதமாவது அவரைத் தங்களுடனேயே வைத்துக்கொண்டிருந்துவிட்டு, பிறகு என் வீட்டில் கொண்டு வந்து விடவும்.

—மகன் கப்புணி

**கதை, கட்டுரைகளுடன் எழுத்தாளர்கள் அனுப்பும் கடிதங்கள் அறிவுக்குச் சுவையாகவும், சிந்தனைக்கு உரியதாகவும் இருந்தால் அது மேலும் அவர்களுக்கு ஒரு + பாயிண்ட்!**

**உதாரணமாக**

அன்புள்ள ஐயா,

நான் இரண்டு நாட்களாக ''ஷேவ்'' கூட செய்து கொள்ளாமல் இந்தக் கதையை எழுதி முடித்தேன்! அதனால் இது 'அறுவை'யாக இருக்காது என்று நீங்கள் நிச்சயமாக நம்பலாம்!

அன்புள்ள ஆசிரியரே,

நீங்கள் இந்தக் கதையைப் பிரசுரித்தால் ஓர் ஆத்மாவாவது நிச்சயம் சாந்தி பெறும்! (அது என்னுடையதுதான் என்று உங்களுக்குச் சொல்ல வேண்டியதில்லை).

அன்புள்ள ஆசிரியரே,

பக்கத்து வீட்டுக்காரர் கதை எழுதுவதைக் கண்டு எனது மனைவி ''நீங்களும் இருக்கிறீர்களே! நீங்களும் கதை எழுதுங்களேன்! எனக்குக் காதல் கடிதமெல்லாம் கல்யாணத்துக்கு முன்னாடி ஜோரா எழுதினேளே!'' என்று நச்சரிக்கத் தொடங்கினாள்.

நச்சரிப்புத் தாங்காமல் எழுந்த கதையே இது.

(பி.கு. நான் அவளுக்குக் காதல் கடிதம் எழுத உதவினது அந்தப் பக்கத்து வீட்டுக்காரர்தான்! இது நமக்குள்ளேயே இருக்கட்டும்!)

அன்புள்ள ஐயா,

எனது கதை நன்றாகத்தான் இருக்க வேண்டும் என்று நீங்கள் பிடிவாதம் பிடிக்க மாட்டீர்கள் என நம்புகிறேன்.

அன்புள்ள ஆசிரியரே,

இந்தக் கதை நிச்சயம் உங்களைக் கண் கலங்கச் செய்யும்! என் மனைவியையே அது கண்ணீர் விடச் செய்தது என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்!

(பி.கு. இன்று வீட்டில் வெங்காய சாம்பார்)

அன்புள்ள பெரியவரே,

இது ஒரு ''தழுவல்'' கதை! அதாவது என் மனைவி அழும் குழந்தையைச் சமாதானப்படுத்தி வைக்க என்னிடம் விட்டுச் சென்றபோது, குழந்தையைத் தழுவிக் கொண்டே எழுதியது!

அன்புள்ள ஆசிரியரே,

இது ஒரு மயிர்க்கூச்செறியும் மர்மக் கதை: மயிரில்லாத ஏதேனும் வழுக்கைத் தலையரிடம் கொடுத்துப் படிக்கச் சொல்லவும்!

அன்புமிக்க ஆசிரியரே,

எனது கதைகள் மிகவும் ருசியுடையவை என்பதை எங்கள் வீட்டில் எல்லோரும் அறிவர். சந்தேகமிருந்தால் பக்கத்து வீட்டுச் சமையல்காரரைக் கேட்கவும்!

அன்புள்ள ஐயா,

சிந்தனைத் தந்தையும், கற்பனை அன்னையும் உதவாடி சந்த 'கதை'க் குழந்தையைப் பத்திரிகைத் தொட்டிலில் தாலாட்டி வையுங்கள். ஒன்று அல்லது இரண்டே போதும் என்று பதிலெழுதாதீர். இது என் முதல் கதைதான்.

கற்பனை—தயாரிப்பு:

கே.ஜி.எஸ். விசுவநாதன்



பன்னிரண்டு வயதுச் சிறுவனை அழைத்துக்கொண்டு வந்த அவன் தாயார் கூறினார்.

''ஏழு எட்டு நாளாச்சு, பையன் சரியாச் சாப்பிடறதே இல்லே. முதல்லே இரண்டு நாள் காய்ச்சல் இருந்தது. இப்போ இல்லே. எதைக் கொடுத்தாலும் வாந்தியும் குமட்டலும்தான். நாலு நாட்கள் ஒருத்தர் மந்திரிச்சார். அப்புறம் இரண்டு நாட்கள் பச்சிலை கொடுத்தார். எதற்கும் கட்டுப்படலே. இனி மேலும் இப்படியே வைச்சிருக்கப்படாதுன்னு இங்கே அழைச்சுக்கிட்டு வந்தேன், டாக்டர்.''

பையனுடைய கண்களைப் பரிசோதித்தேன். மஞ்சளாக இருந்தது. படுக்க வைத்து மார்பின் எலும்புக் கூட்டுக்குக் கீழே வலப்புறம் கல்லீரல் (Liver) அமைந்துள்ள பகுதியில் விரல் நுனிகளால் அழுத்தி, 'வலி இருக்கிறதா?' என்றேன்.

''நீங்க அமுக்கிற போது வலிக்கிறது'' என்றான் சிறுவன். சிறு நீரைச் சோதித்த பிறகு என் ஊகம் உறுதியாயிற்று.



## குட்மார்னிங் டாக்டர்!

# மந்திரத்துக்கு மசியுமா மஞ்சள் காமாலை?

''மஞ்சள் காமாலையா, டாக்டர்?'' சிறுவனின் தாயார் கவலையோடு கேட்டார்.

''ஆமாம் கவலைப்படாதீர்கள். மஞ்சள் காமாலை ஒரு நோய் அன்று. நோயின் சின்னம். அவ்வளவே. பையனின் கல்லீரல் மிகவும் பாதிக்கப்பட்டுள்ளது. நான் மருந்து எழுதிக் கொடுக்கிறேன். மருந்து எவ்வளவு முக்கியமோ, அவ்வளவு ஓய்வும் அவசியம். பையன் படுக்கையிலேயே இருக்கட்டும். அத்துடன் உணவுக் கட்டுப்பாடும் தேவை. பால், வெண்ணெய், தயிர் இவற்றைத் தவிர்க்க வேண்டும். நீர்த்த மோர், குளுகோஸ், தக்காளி, கீரை, வேக வைத்த காய்கறிகள் புரதச் சத்துமிகுந்த உணவு வகைகள் ஆகியவற்றைத் தாராளமாகக் கொடுங்கள், ஒரு வாரம் கழித்துப் பையனின் உடல் நிலையை நீங்கள் வந்து சொல்லுங்கள். சிறுவனை அழைத்துக் கொண்டு வர வேண்டாம்'' என்று கூறி பி. காம்ப்ளெக்ஸ், கார்ட்டிஸோன் மாத்திரைகள் எழுதிக் கொடுத்தேன். இதற்கு கார்ட்டிஸோன் நல்ல பலன் அளிக்கிறது. இரண்டு நாட்கள் கழித்துப் பையனின் தாயார் வந்து,

''உடம்பெல்லாம் அரிக்கிறாப் போலிருக்கிறது. சொறிந்து கொண்டே இருக்கிறான்'' என்றார்.

''சமையலுக்கு உபயோகப்படுத்தும் சோடா உப்பு (Baking Soda) ஒரு ஸ்பூன் எடுத்து ஒரு வாளித் தண்ணீரில் கரைத்து அந்த நீரில் பையன் குளிக்கட்டும். அரிப்பு நீங்கிவிடும். உடம்பு சரியாகிவிட்டாலும் குறைந்தபட்சம் ஒரு மாதமாவது பையன் ஓய்வில் இருக்க வேண்டும்!'' என்று எச்சரித்து அனுப்பினேன்.

**''இந்நோய் ஏற்படக் காரணம் என்ன?''**

''நீரின் மூலம் வைரஸ் கிருமிகளால் பரவும் நோய் இது. கடைகளில் வாங்கும் காய்கறிகளை நல்ல நீரில் கழுவிய பிறகே நறுக்கிச் சமைக்க வேண்டும். ஈ மொய்த்த, அழுகிய பழங்களைப் புசிக்கக் கூடாது. குழாய் நீரைக் கொதிக்க வைக்காமல் குடிப்பதன் விளைவாகவும் ஏற்படலாம். நீரின் மூலம் உடலுக்குள் நுழையும் இந்த நுண்ணிய 'வைரஸ்' கிருமிகள் கல்லீரலைத் தாக்கும். கல்லீரலில் புண் உண்டாகலாம். இன்னொரு காரணம்: கட்டி (Tumour) கல் (Bladder Stone) இவை ஏற்பட்டால் பித்த நீர்ச் சுரப்பியில் அடைப்பு ஏற்பட்டு, பித்தநீர் இரத்தத்துடன் கலந்துவிடுவது.''

**''ஒரு குடும்பத்தில் ஒருவருக்கு இந்நோய் கண்டால், அது மற்றவர்களுக்கு வராமல் தடுப்பு ஊசி போட்டுக் கொள்ள முடியுமா?''**

''தடுப்பு ஊசி இருக்கிறது. 'இம்யூனோ குளோப்யூலின்' (Immnuo Globulin) என்ற அந்த மருந்து விலை சற்று அதிகம். ஓர் இஞ்செக்ஷன் போட்டுக் கொண்டால் போதும்!''

**''எந்த வயதில் இது அதிகம் வரக்கூடும்?''**

''குழந்தை பிறந்து இரண்டாவது நாளே கூட வரக்கூடும். இந்நோய் வந்த பிறகு சரியாகக் கவனிக்காமல் விட்டு விட்டால் விபரீதமாகிவிடலாம். உடல் முழுவதும் மஞ்சள் நிறமாகி நோயாளி சுய நினைவு இழந்து Coma நிலையும் ஏற்படக்கூடும்.''

**— டாக்டர் பி. வாதிராஜராவ் கூறக் கேட்டு எழுதியவர் : ஆர். பி.**



படம் : குடிநீர்க் குழாயருகே சாக்கடை நீரும் ஓடிச் சுகாதாரக் குறைவைத் தருகிறது.

# தேனீயும் மரமும்



தேனீக்கள் கர்வப்பட்டன. "அனைவருக்கும் நாங்கள் ஓர் எடுத்துக்காட்டு! மற்றவர்களுக்குச் சுறுசுறுப்பாய் இருப்பது எப்படி என்று கற்றுத் தருகிறோம். தேன் என்றாலே இனிப்பு என்று பொருள். மக்கள் தங்களுக்குப் பிரியமானவர்களை "தேனே!" என அழைக்கின்றனர். அவர்கள் தேனைக் கடவுளுக்கு வணங்கி நைவேத்தியம் செய்கின்றனர்!"

மரங்கள் கூறின: "தேன் இனிப்பானது. நல்லது தான். ஆனால் அது எங்கிருந்து உங்களுக்குக் கிடைக்கிறது? பூக்களிலிருந்து திருடுகிறீர்கள். மனிதர்களுக்கு அதை எப்படித் தருகிறீர்கள்! மனமுவந்து தருகிறீர்களா? இல்லை. அவர்கள் பிடுங்கிக் கொள்கிறார்கள். நீங்கள் அவர்களைக் கடிக்கிறீர்கள். அவர்கள் உங்களைச் சபித்தபடியே ஓடிப் போகிறார்கள். ஆனால் நான் எப்படித் தருகிறேன் பாருங்கள். நான் எதையும் பதிலுக்குக் கேட்ப தில்லை. அனைத்தையும் தருகிறேன். அதற்காக வருந்துவதோ ஆட்சேபிப்பதோ இடையாது. நிழல் தருகிறேன். பழங்கள் தருகிறேன். என் பழங்களைப் பறிக்கிறார்களே என்று நான் கோபிப்ப தில்லை."

தீர்வு: (நீங்களே எழுதிக் கொள்ளவும்)

# காகங்களும் குயில்களும்



குயிலை அதன் சமூகம் விரட்டி விட்டது. அது காகங்களுடன் போய் வாழ்ந்தது. முட்டை பொரிக்கும் காலம் வந்தது. குயில்கள் காகக் கூடுகளுக்கு வந்து முட்டையிட்டன. பிரஷ்டம் செய்யப்பட்ட குயில், காகங்களுக்குக் குயில் முட்டைகளைக் காட்டிக் கொடுத்து விட்டது. காகங்கள் அவற்றை உருட்டி விட்டன. அவை அழிந்தன.

அந்த ஆண்டு ஒரு குயில் குஞ்சு கூடப் பிறக்க வில்லை. குயில் சமூகம் இதனை அறிந்ததும் தாங்கள் பிரஷ்டம் செய்த குயிலைத் திரும்ப அழைத்துச் சமாதானம் பண்ணிக் கொண்டன.

தீர்வு: (நீங்களே எழுதிக் கொள்ளவும்)

Printed and published by V. Vaidyanathan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600 031.
Managing Editor: T. Sadasivam. Associate Editor: K. Rajendran.

## அறிமுகம் இதோ

# ஹை பவர் ஸர்ஃப்






# நீங்கள் பார்த்தறியாத வெள்ளைவெளேர் சலவைக்கு !

புதிய ஹை பவர் ஸர்ஃப் சலவைச் சக்தியே சக்தி; வேறெந்த சலவைப் பவுடரையும் விட அதிக சக்தி படைத்துள்ளது. அதனால்தான், சக்தி ஓங்கிய அதன் நுரை நீடித்துநின்று, ஆழ ஊடுருவித் துலக்குகிறது...உன்னதமான வெள்ளைவெளேர் உடைகள் உங்கள் குடும்பத்திற்கு.

**ஒப்பற்ற வெள்ளைவெளேர் சலவைக்கே புதிய ஹை பவர் ஸர்ஃப்...இது வெட்டவெளிச்சம் !**

*இந்துஸ்தான் லீவரின் நயமான தயாரிப்பு. அட்டைப்பெட்டிகளிலும், சீலிட்ட பைகளிலும் மட்டுமே வருகின்றன. உதிரியாக விற்பதில்லை.*

லின்டாஸ்–SU. 191-140 TM

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka

இலங்கையில் விலை 75 சதம் (தபால் செலவு தனி)
மலேசியாவில் விலை (விமானப் பதிப்பு) 60 மலேசிய காசு